# நியோசிட் DDT யினால் பேன்களை நிச்சயம் ஒழிக்கலாம்



தலைப் பேன்களால் மிகுந்த தொந்தரவுமாத்திரமின்றி தேகாரோக்கியத்திற்கும் அவை பெரிதும் ஆபத்தாயிருக்கின்றன; ஏனெனில் டைபாயிட் ஜுரம் பரவுவதற்கும் காரணமாயிருக்கின்றன. 10 சதவிகிதம் DDT கலந்துள்ள நியோஸிட்டினால் அவற்றை எளிதில் கொன்று விடலாம். தலை பேன்களை ஒழிக்க நியோஸிட் பவுடரைத் தலைமீது நன்றாக அழுத்தித்தேய்க்கவும். சீலைப் பேன்களை ஒழிக்க அவை கடிக்கும் இடங்களிலும், ஆடைகளிலும் குறிப்பாகச் சட்டைப்பை, மற்றும் தையல் இடுக்குகளிலும் நன்றாகப் பவுடரை தூவிவைக்கவும். துடைத்தோ, கழுவியோ போக்கிவிட்டால் மீண்டும் பவுடரைத் தூவவேண்டும். புதிதாக உற்பத்தியான பேன்களை ஒழிக்க அதுதான் வழி (DDT ஈர்களைக்கொல்லாது).

DDT உடனடியாகக் கொல்லாதென்பது தெரிந்த விஷயம். ஆனால் அது பூச்சிகள்மீது பட்டுவிட்டால் அவை சாவது நிச்சயம். அதன் நீடித்து வேலைசெய்யும் சக்தி வேறெந்த பூச்சிகள் நாசினிக்கும் கிடையாது.

# நியோஸிட்டை

## சரியானபடி உபயோகியுங்கள்!

**DDT Geigy DDT**

சென்னை ராஜதானியில் குறிப்பிடப்பட்ட ஜில்லாக்கள் தவிர, திருவாங்கூர், கொச்சி மற்றும் புதுக்கோட்டை சமஸ்தானங்கள் உள்பட விநியோகஸ்தர்கள்:

மெஸர்ஸ் அடிஸன் அண்ட் கோ லிட், மவுண்ட் ரோட், மதராஸ்.

மைசூர் சமஸ்தானம், கூர்க், பல்லாரி, அனந்தபூர், கடப்பை கர்நூல் ஆகிய ஜில்லாக்களுக்கு விநியோகஸ்தர்கள்:

மஹமத் ரஹீம் கனி

99-B உஸ்மான்கான் ரோட், பெங்களூர் ஸிடி.

GIK 5476 TM



## ஜுரத்தில்

உஷ்ணம் 102 டிக்ரிக்கு மேலே போனால், உடனே கூந்தல் உதிர்வது நிச்சயம். அம்மையானாலும் சரி, 'டைபாயிட்' 'மலேரியா' 'இன்புளுயன்ஸா' முதலிய விஷஜுரங்களானாலும் சரி, இது காரணமாகவே மயிர் அபரிமிதமாகக் கொட்டுகிறது. ஜுர சமயங்களில் உஷ்ணம் அதிகமாக ஏறுவிடினும், மயிர் உதிர்வது மட்டும் தவறுவதே யில்லை. அப்படி உதிரும்போது தக்க சிகிச்சை செய்து தடுக்காமல் விடுத்து விட்டால், மயிர் விடாமல் உதிர்ந்து தலையும் வழுக்கையாய் விடும்.

வெள்ளம் வந்த பிறகு அணைபோடுவானேன்? மயிர் உதிர ஆரம்பிக்கு முன்னமே, கூந்தலைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். ஜுரத்துக்குப் பிறகு கேசம் அரை பங்கு கால் பங்காகக் குறைந்து விட்டால், கேசவர்த்தினியைக் கொண்டு கேசத்தை விருத்தி செய்து பூர்ணமாக்கிக் கொள்ளுங்கள். கடைசியாக எல்லாப் பரீக்ஷைகளும் செய்தான பிறகு கேசவர்த்தினியே கூந்தலுக்குச் சிறந்தது என்று தெரியவந்தால், கேசவர்த்தினியை முதலிலேயே கைக்கொள்ளலாமே?

# கேசவர்த்தினி

கூந்தலைப் பாதுகாப்பது, விருத்தி செய்வது, அழகு படுத்துவது

**விலை அணா 12.**

(மேற் செலவு வேறு)

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பாளர்:

**தென் இந்திய ரஸாயனசாலை,**
**ஆர். எஸ். புரம், கோயமுத்தூர்.**

## விசேஷ சலுகை

மிகவும் குறைந்த விலையில் ஸ்விஸ்ஸில் செய்யப்பட்ட கைக் கெடியாரங்கள். ப்ளாஸ்டிக் பாண்டினால் கட்டப்பட்டு. மூன்று வருஷங்கள் உழைப்புக்கு உத்தரவாதமான சிறந்த யந்திர அமைப்பு வாய்ந்தவை.



நெ. 11[illegible] [illegible] ஷேப்

| | | |
|---|---|---|
| பளபளப்பான க்ரோமியம் கேஸ் | ரூ. | 40 0 |
| உயர்ந்த ரகம் ... | .. | 45 0 |
| ரோல்டு கோல்டு கேஸ் (10 வருஷ உத்தரவாதம்) | .. | 60 0 |
| 15 ஜுவெல்ஸ் க்ரோமியம் கேஸ் | .. | 75 0 |
| 15 ஜுவெல்ஸ் ரோல்டு கோல்டு | .. | 90 0 |



நெ. 114 — டோனோ ஷேப்

| | | |
|---|---|---|
| பளபளப்பான க்ரோமியம் கேஸ் | ரூ. | 42 0 |
| உயர்ந்த ரகம் ... | .. | 46 0 |
| ரோல்டு கோல்டு கேஸ் (10 வருஷ உத்தரவாதம்) | .. | 62 0 |
| 15 ஜுவெல்ஸ் க்ரோமியம் கேஸ் | .. | 76 0 |
| 15 ஜுவெல்ஸ் ரோல்டு கோல்டு | .. | 92 0 |



நெ. 115 — [illegible] ஷேப்

| | | |
|---|---|---|
| க்ரோமியம் கேஸ் | ரூ. | 24 0 |
| .. உயர்ந்தரகம் (7 ஜுவெல்ஸ்) | | 30 0 |
| 15 ஜுவெல்ஸ் க்ரோமியம் கேஸ் | .. | 38 0 |
| ஷை ரோல்டு கோல்டு கேஸ் (10 வருஷ உத்தரவாதம்) | .. | 75 0 |
| ஷை வாடர்ப்ரூப் க்ரோமியம் | | 75 0 |



நெ. 116 — ரெக்டாங்குலர் ஷேப்

| | | |
|---|---|---|
| க்ரோமியம் கேஸ் | ரூ. | 38 0 |
| க்ரோமியம் உயர்ந்த ரகம் | .. | 42 0 |
| 15 ஜுவெல்ஸ் க்ரோமியம் கேஸ் | .. | 65 0 |
| ஷை ரோல்டு கோல்டு கேஸ் | | 85 0 |

மேலுள்ள வடிவங்களில் லேடீஸ் கை கெடியாரங்கள் 12½% விதம் அதிகப்படி விலை.

அலாரம் டைம் பீஸ்
ரூ. 18/- உயர்ந்த ரகம் ரூ. 22/-

பாக்கிங், தபால் செலவு ப்ரத்யேகம்.
ஒரு கெடியாரத்திற்கு மேல் ஆர்டர் செய்தால்
தபால் செலவு இல்லை.

கடிதப் போக்குவரத்து ஆங்கிலத்தில்

**CALCUTTA WATCH Co. (Sec. 073)**

**Post Box No. 12203, Calcutta - 5**

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 7 | இதழ் 27 — பிப்ரவரி 1 — சர்வஜித்து தை 19



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.

சட்ட ஞானத்துக்கும் சட்ட நிபுணர்களுக்கும் பெயர் போனது சென்னை மாகாணம். லாந்தர் மரத்தின் அடியில் நின்று படித்த பின்னே ஹைகோர்ட் ஜட்ஜ் ஆன டி. முத்துசாமி ஐயரைத் தவிர்த்தாலும் கூட எத்தனையோ பிரபல வக்கீல்களும் நீதிபதிகளும் சென்னையில் தோன்றிப் புகழ் பெற்றிருக்கிறார்கள். ஸர் வி. பாஷ்யமய்யங்கார் என்ன, ஸர் வி. கிருஷ்ணசாமி ஐயர் என்ன, ஸர் என். சுப்பிரமண்ய ஐயர் என்ன, ஸ்ரீ என். ஸ்ரீனிவாசய்யங்கார் என்ன, ஸ்ரீ அல்லாடி கிருஷ்ணசாமி ஐயர் என்ன இப்படி எத்தனையோ பேர்கள் ஹைகோர்ட் வான மண்டலத்தில் இந்திரர்களாகவும் சந்திரர்களாகவும் விளங்கியிருக்கிறார்கள்.




எனினும், இவ்வளவு பிரபல சென்னைச் சட்ட நிபுணர்களில் யாரும் சென்னை ஹைகோர்ட்டின் தலைமை நீதிபதியாக இருந்ததில்லை. இதற்குக் காரணம் (ஸ்ரீ சத்தியமூர்த்தி அவர்களின் வாக்குப்படி) "அவன் தோல் வெளுப்பாய் என் தோல் கறுப்பாய்!" என்ற நியாயந்தான்! இந்தியா சுதந்திர மடைந்த இந்த சர்வஜித்து வருஷத்தின் பேர்ப்படி அநியாயம் அடிபட்டுப் போய், சென்னை வாசியான இந்தியர் ஒருவர் சென்னை ஹைகோர்ட்டின் தலைமை நீதிபதியாகியிருக்கிறார். இந்த நல்ல விளைவு, நமது பிரதம மந்திரி கனம் ஓமந்தூர் ரெட்டியாருக்கும் பழைய சீப் ஜஸ்டிஸ் கனம் ஜென்டில் துரைக்கும் ஏற்பட்ட தகராறு காரணமாக ஏற்பட்டதென்று ஒரு வதந்தி உலாவியது. இது உண்மையானால், மேற்படி மகாகனம் தகராறு அவர்களை நாம் மனமார வாழ்த்துகிறோம்.

புதிய தலைமை நீதிபதி கனம் ராஜமன்னார் அவர்கள் ஏற்கெனவே சென்னை ஹைகோர்ட்டின் நீதிபதியாயிருந்த ஸ்ரீ வெங்கட்ரமண ராவ் நாயுடு அவர்களின் புதல்வர். "மகன் தந்தைக்கு ஆற்றும் உதவி இவன் தந்தை என்னோற்றான் கொல் எனும் சொல்!" என்ற திருவள்ளுவர் வாக்கைக் கனம் ராஜமன்னார் நிறைவேற்றி வைத்திருக்கிறார்.

கனம் ராஜமன்னார் சிறந்த கல்விமான்; கலை அன்பர். இலக்கியம், சங்கீதம், சித்திரம், நாட்டியம் ஆகிய எல்லாக் கலைகளையும் சம நோக்குடன் பார்த்து ஆதரித்து மகிழும் தனி சிறந்த ரசிகர். அவருடைய தாய் மொழியான தெலுங்கு பாஷையில் சில அருமையான நாடக நூல்களை இயற்றியிருக்கிறார்.

இத்தகைய உயர்ந்த பண்புகள் படைத்த கனவான் தலைமை நீதிபதிப் பதவியை வகிப்பதால் சென்னை ஹைகோர்ட்டின் புகழ் இன்னும் ஓங்குமென்றும், சென்னை மாகாணத்தின் நீதி பரிபாலனம் மேலும் சிறப்படையுமென்றும் எதிர்பார்க்கிறோம்.

# கட்டழகி தவமணி தேவி தன் மேனியை மிருதுவாகவும் மென்மையாகவும் வைத்திருக்க லக்ஸ் டாய்லட் சோப்பைத்தான் நம்புகிறர்

அதிரூபவதியான இந்த சினிமா நட்சத்திரத்தின் அழகு பரிக்ஷிக்கொள்ளும் முறை லக்ஸ் டாய்லட் சோப் தான். சருமத்தை சுத்தம் செய்து மிருதுவாக்க இச்சோப்பின் வெண்ணிறம் கொண்ட சுகந்த நுரை போல் வேறெதுவுமில்லை என்பது அவருக்குத் தெரியும். மென்மைவாய்ந்த பூரணப் பொலிவுள்ள மேனியை விரும்பும் எல்லோரையும் அவர் லக்ஸ் டாய்லட் சோப் உபயோகித்து தவருமல் சுத்தம் செய்து கொள்ளும்படி உபதேசிக்கிறர்.




# லக்ஸ் டாய்லட் சோப்

*சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்!*

LTS. 174-23 TM




மலர் 7 } தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதி { இதழ் 27

# என்ன சேதி?

## நம்ப முடியவில்லை

காந்திஜி உண்ணாவிரதத்தை வெற்றிகரமாக முடித்து விட்டார் என்பதை நினைத்துத் தேச முழுவதும் சந்தோஷப்பட்டுக்கொண்டிருந்தபோது, புதுடில்லியிலிருந்து வந்த செய்தியொன்று வெடிகுண்டைத் தூக்கிப் போட்டது போல நம்மைத் திடுக்கிட வைத்தது.

ஆனால், உண்மையில் அங்கு வெடித்ததும் வெடி குண்டேதான்!

சென்ற புதன்கிழமையன்று காந்தி மகாத்மா புது டில்லியில் பிரார்த்தனை நடத்திக் கொண்டிருந்தபோது யாரோ ஒருவன் அவர்மீது வெடிகுண்டை வீசினானாம். குண்டு வெடித்ததாம். நல்ல வேளையாக, காந்திஜிக்கு யாதொரு விதமான ஆபத்தும் ஏற்படவில்லையாம்.

இன்னும் பல்லாண்டுகள் வாழ்ந்து இந்தியாவுக்கும் உலகத்துக்கும் மகாத்மா காந்தி தொண்டு செய்ய வேண்டும்; துன்புற்று வாடும் மனித சமுதாயத்தைக் கரையேற்றி வைக்க வேண்டும்; சத்தியத்தையும் தர்மத்தையும் பரப்பி, இந்த உலகைப் புனிதப்படுத்த வேண்டும் என்பது கடவுளின் சித்தமாக இருக்கும்போது வெடிகுண்டுதான் அவரை என்ன செய்யமுடியும். வேறு ஒன்றுதான் அவரை என்ன செய்ய முடியும்?

காந்திஜிக்கும் விரோதிகள் உண்டு. அவர்கள் அந்த மகா புருஷருடைய உயிரைக் கவரவும் துணிவார்கள் என்பதை நம்மால் நம்பவே முடியவில்லை.

தம்மீது குண்டு வீசிய அந்த இளைஞனை ஒன்றும் செய்ய வேண்டாமென்று காந்திஜி அதிகாரிகளைக் கேட்டுக் கொண்டது ஏசுநாதரின் அரிய கருணைச் செயலை நமக்கு ஞாபகப்படுத்துகிறது.

பாரதத் தாயின் தவப் புதல்வரைக் காப்பாற்றிக் கொடுத்ததற்காக ஆண்டவனுக்கு வணக்கம் கூறுகிறோம்.

## தயவு வைக்கட்டும்!

ஜவுளிக் கன்ட்ரோலை நீக்கி விட்டதாக மத்திய சர்க்காரும் சென்னை சர்க்காரும் அறிவித்து விட்டார்கள்.

மேற்படி கன்ட்ரோலை நீக்கி விட்டதற்காக யாரும் ஒரு சொட்டுக் கண்ணீர் கூட வடிக்கப் போவதில்லை. ஏனெனில், மேற்படி கன்ட்ரோல் எந்த நோக்கத்துடன் ஏற்படுத்தப்பட்டதோ அந்த நோக்கம் கைகூடவில்லை. கன்ட்ரோல் ஏற்பட்டதனால் விலை சற்றுக் குறைந்தது; ஆனால் துணிகள் கிடைக்கவில்லை.

கன்ட்ரோலை ஒழித்த பிறகு ஜவுளி விலையை நிர்ணயிக்கும் பொறுப்பு மில் முதலாளிகளுக்கு விடப்பட்டிருக்கிறது. தற்போது பருத்தி விற்கும் விலையை அநுசரித்து ஜவுளிக்கு நியாயமான விலையை வைப்பதாக அவர்களும் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். புண்ணியவான்கள் பெரிய மனது செய்து விலையைச் சற்று நிதானமாகவே வைக்கட்டும்!

## மற்றொரு கூச்சல்

ஆத்திரத்திலும் அவசரத்திலும் புகழ்பெற்ற நம்முடைய ஆந்திர சகோதரர்களுக்கு இணையானவர்கள் உலகத்திலேயே இல்லை என்று நினைத்திருந்தோம். "மதராஸ் மனதே! செங்கற்பட்டும் மனதே!" என்று கூச்சலிட்டுக் கொண்டு ஊர்வலம் செல்வோருக்கு யாரும் நிகரில்லையென எண்ணியிருந்தோம். இப்போது கர்நாடக சகோதரர்கள் அவர்களுடன் போட்டி போட்டுக்கொண்டு கிளம்புவது ரொம்ப வேடிக்கையாக இருக்கிறது.

ஸ்ரீ பிரகாசம்காரு சமீபத்தில் டில்லிக்குப் போய்ப் பண்டித நேருவைப் பேட்டி கண்டபோது, ஏப்ரல் மாதத்தில் ஆந்திர மாகாணத்தைப் பிரித்து ஸ்ரீ பிரகாசத்தின் கையிலேயே கொடுத்து விடுவதாகச் சொன்னாராம். இதைக் கேட்ட கர்நாடக

மாகாண காங்கிரஸ் தலைவர்கள் "ஐயையோ, அப்படியா சமாசாரம்! ஆந்திரர்களுக்குத் தனி மாகாணம் கிடைக்கும்போது நாங்கள் மாத்திரம் என்ன சோடையா?—எங்களுக்குந்தான் தனி மாகாணம் முதலாவதாகக் கொடுக்க வேண்டும்!" என்று பலமாகக் கூச்சல் போட ஆரம்பித்திருக்கிறார்கள்.

## நடக்கவே நடக்காது!

ரொம்ப சரி. கர்நாடக தேசத்தின் மக்கள் தனி மாகாணம் கேட்பதிலே நமக்கு யாதொரு ஆட்சேபமும் இல்லை. இந்த விஷயத்திலே தமிழ் மக்களுடைய பூரண அனுதாபமும் அவர்களுக்குக் கிடைக்கும் என்று சொல்ல முடியும்.

ஆனால், முட்டும்போதே ஏன் பெரிய கருங்கற்பாறையாகப் பார்த்து அவர்கள் முட்டிக் கொள்ள வேண்டுமோ, அது தான் தெரியவில்லை.

சேலம், கோயமுத்தூர் ஜில்லாக்களில் சில பகுதிகளைக் கர்நாடக மாகாணத்துடன் சேர்க்க வேண்டுமாம்! நாட்டிலே இளைத்தவர்களும் இளிச்சவாயர்களும் தமிழர்கள்தான் என்று அவர்கள் நினைக்கிறார்கள் போலும்! அப்படியானால் அவர்கள் ஏமாறுவது நிச்சயம். தமிழர்களுடைய தூக்கம் கலைந்து விட்டது என்பதையும் தமிழர்கள் தங்களுக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டிய பகுதியில் ஒரு அங்குலத்தைக் கூட மற்றவர்களுக்கு விட்டுக் கொடுக்க மாட்டார்கள் என்பதையும் அவர்கள் தெரிந்து கொள்ளட்டும். மற்றவர்கள் தலையில் கையை வைத்துத்தான் அவர்கள் தனி மாகாணம் அமைக்கப் போவதாயிருந்தால் அது ஒருபோதும் நடக்கவே நடக்காது என்பதைத் திட்டமாகத் தெரிவிக்கிறோம்.

## புது யுகம் காண்போம்!

நாளது 1948-ம் வருஷம் சென்னை மாகாணத்தில் வாழும் பாக்கியம் பெற்ற நாம் ரொம்பக் கொடுத்து வைத்தவர்கள் என்பதில் கொஞ்சமும் சந்தேகமே இல்லை.

இதுவரை எந்தக் காலத்திலும் எந்தத் தேசத்திலும் சாதித்திராத ஓர் அரிய காரியத்தை இந்தச் சென்னை மாகாணத்தில் சாதிக்கும் பெருமை நமக்குக் கிடைக்கப் போகிறது.

மதுவிலக்கைப் பற்றித்தான் குறிப்பிடுகிறோம். இன்னும் 4 மாதங்களுக்குள் அதாவது வரும் அக்டோபர் மாதம் முதல் தேதி பிறந்ததும் இம் மாகாணம் முழுவதும் மதுவிலக்கு அமுலுக்கு வந்து விடும். இதைச் சென்னைப் பிரதம மந்திரி ஸ்ரீ ஓமந்தூர் ராமஸ்வாமி ரெட்டியார் ரொம்பத் தெளிவாகச் சொல்லி விட்டார். "ஏது எப்படிப் போனாலும் சரி, பாக்கி யிருக்கும் எட்டு ஜில்லாக்களில் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வந்து விட்டே மறு காரியம் பார்க்கப்போகிறோம்" என்று சொல்லி விட்டார்.

அக்டோபர் முதல் தேதியிலிருந்து இம்மாகாணத்தில் ஒரு கள்ளுக் கடையையோ சாராயக் கடையையோ யாரும் பார்க்க முடியாது. மதுவரக்கன் அடியோடு ஒழிந்து போவான்.

சென்னை சர்க்கார் ஏராளமான வருமான நஷ்டத்தையும் பொருட்படுத்தாமல் இத்தகைய உத்தமோத்தமமான ஒரு திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்து நம் மாகாணத்தின் கௌரவத்தை உயர்த்தப் போகிறார்கள். அதற்காக அவர்களைப் பாராட்டுகிறோம். மது ஒழிந்த நாட்டிலே வாழப் போகும் நாம் கொடுத்து வைத்தவர்கள் அல்லவா?

## மூர்ச்சையடைந்தார்கள்!

சென்ற வாரத்தில் சென்னை மாகாணமெங்கும் — சர்க்கார் காரியாலயங்களிலும் டிராம் வண்டிகளிலும் பஸ்களிலும் பாதைகளிலும் வீடுகளிலேயும் கூட — அநேகர் பட், பட் என்று மூர்ச்சை போட்டு விழுந்தார்களாம்! அப்புறம் சர்க்கார் காரியம் நடக்க வேண்டுமே என்பதை முன்னிட்டுத் தாங்களாகவே மூர்ச்சை தெளிந்து எழுந்தார்களாம்! யாரா? வேறு யார்? பிரசித்திபெற்ற என். ஜி. ஓ. க்கள் தான்! அவர்களுடைய பஞ்சப்படி அலவன்ஸில் மாதம் இரண்டு ரூபாயும் நாலு ரூபாயும் எட்டு ரூபாயுமாகத் தாராளமாய்ச் சென்னை சர்க்கார் உயர்த்திவிடப் போவதாகச் செய்தி வெளியிட்டார்கள் அல்லவா? என். ஜி. ஓ. க்கள் மூர்ச்சையடைந்ததற்கு மேற்படி செய்திதான் காரணம். சென்னை சர்க்காரின் தாராளம் அவர்களை அப்படிக் கிறுகிறுக்கச் செய்து விட்டது!—சென்னை சர்க்காரின் மேற்படி முடிவு வெளியான அதே சமயத்தில் அரிசி விலை துணி விலை முதலியவையும் ஏறியிருப்பது பற்றி என். ஜி. ஓ. க்கள் சிறிது ஆறுதல் அடையலாம். ஏனென்றால் பொருள்களின் விலை உயர்ந்தால் விற்பனை வரியில் அதிக வருமானம் கிடைக்கும். வருமானம் அதிகமானால் சென்னை சர்க்காரின் தாராளம் இன்னும் கொஞ்சம் அதிகமாகலாமல்லவா?



# தெய்வமானார்

● ● ● க நாடு வாழப் பிறந்த மகாத்மா காந்தியின் உலக வாழ்க்கை, 30—1—48ல் மகா தியாகத்தில் முடிவுற்றது. அன்று மாலை பிரார்த்தனைக்குச் செல்லும் ...து அம்மகாபுருஷர் யாரோ ஒரு கொடும் பாதகனால் சுடப்பட்டு மண்ணுடலை நீத்துத் தெய்வமானார். கோடிக்கணக்கான மக்கள் கண்ணீர் வெள்ளம் பெருக்கி அந்த மகானுடைய தெய்விக வடிவத்தை இதயக் கோயிலிலே வைத்துப் பூஜிக்கிறார்கள். ● ● ●

# வைத்தியமா? வாக்குவாதமா?



# நல்ல குழந்தை! சமர்த்துக் குழந்தை!!

வீட்டிலே திருடர்கள் புகுந்து ஒரு பொருள் பாக்கியில்லாமல் எல்லாவற்றையும் கொண்டு போனார்கள். நகை துணிமணி பாத்திரங்கள் உணவுப் பண்டங்கள் எல்லாவற்றையும் கொண்டு போனார்கள். தண்ணீர் வைத்திருந்த குடத்தைக்கூட, தண்ணீரைக் கொட்டிக் கவிழ்த்துவிட்டு, கொள்ளை கொண்டு போய் விட்டார்கள்.

குழந்தைக்குப் பசியும் தாகமும் எடுத்தது. "தண்ணீர் வேண்டும்!" என்று அழுதது. தாயார் பரிதவித்தாள். சொத்துக்கள் பறிபோன துக்கத்தையெல்லாம் மறந்து விட்டுக் கிணற்றங்கரைக்கு ஓடினாள். வாளியில் கயிற்றைக் கட்டிக் கிணற்றிலே போட்டாள். கிணற்றிலோ தண்ணீர் வெகு ஆழத்தில் இருந்தது. மிகப் பிரயாசையுடன் தண்ணீரை வாளியில் நிரப்பி மூச்சு வாங்க மேலே தூக்கிக் கொண்டிருந்தாள்.

குழந்தை நல்ல குழந்தை! சமர்த்துக் குழந்தை! அம்மாவின் பேரில் கோபம் கொண்டது. "தாகம், தாகம் என்று நான் தவிக்கிறேன்; நீ என்னமோ செய்துகொண்டிருக்கிறாயே?" என்று அம்மாவின் காலைப் பிடித்து இழுத்தது.

கடவுள் அருளால் தாயார் கிணற்றில் விழாமல் தப்பினாள். ஆனால் கயிறும் வாளியும் தண்ணீருடன் கிணற்றிலே விழுந்து மூழ்கின.

* * *

தேசத்தில் தொழிலாளர்கள் உத்தியோகஸ்தர்கள் முதலியவர்களைத் தற்போது வேலை நிறுத்தம் செய்யத் தூண்டுகிறவர்கள் மேற்படி குழந்தையைப் போலக் காரியம் செய்யும்படி தான் தூண்டுகிறார்கள்.

"அம்மா பொல்லாதவள்! பார்! உனக்குத் தாகத்துக்குத் தண்ணீர் கொடுக்க மாட்டேன் என்கிறாள்! அவளுடைய காலைப் பிடித்து இழு! அவளைக் கிணற்றிலே பிடித்துத் தள்ளு!" என்று சொல்கிறார்கள்.

அவர்கள் நல்ல குழந்தைகள்! அவர்களுடைய தூண்டுதலின்படி வேலை நிறுத்தம் செய்கிறவர்களோ மிகவும் சமர்த்தான குழந்தைகள்!

* * *

இந்தியா தேசம் நூற்றைம்பது வருஷம் ஆங்கிலேயரின் யதேச்சாதிகார ஆட்சியில் இருந்தது.

இந்தக் காலத்தில் என்னென்ன விதத்தில் என்னென்ன பொருளைக் கொண்டு போகலாமோ அவ்வளவும் பிரிட்டிஷார் கொண்டு போனார்கள்.

கடைசி கடைசியாக, சென்ற யுத்தம் நடந்தபோது அவர்கள் கொண்டு போன பொருள்களுக்குக் கணக்கும் இல்லை; வழக்கும் இல்லை.

கங்கையும் காவேரியும் யமுனையும் கோதாவரியும் பாயும் நாட்டில், இந்தத் தேசத்து மக்களுக்கு வேண்டிய உணவுப் பொருள் விளைவதற்கு வழியில்லாமல் செய்துவிட்டார்கள்.

உணவுப் பொருள் மட்டுந்தானா? நாட்டு மக்களுக்கு வேண்டிய துணி உற்பத்தி கிடையாது. இயந்திரம் செய்யும் வசதி கிடையாது. இரும்பு உற்பத்தி போதாது. ஆயுதங்களோ இல்லவே இல்லை. விவசாயக் கருவிகள் செய்யும் வசதிகூட இல்லை. மக்களுக்கு நோய் வந்தால் கொடுக்க நாட்டில் மருந்து உற்பத்தி இல்லை. குழந்தைகள் படிக்கப் போதுமான வசதி இல்லை. ரயில் என்ஜின், மோட்டார் வண்டி, சைக்கிள், மூக்குக் கண்ணாடி, பௌண்டன் பேனா, காகிதம் முதலிய தற்கால வாழ்வுக்கு முக்கியமான சகல பொருள்களும் வெளிநாடுகளிலிருந்து வர வேண்டும். கப்பல்களும் அப்படித்தான்!

இப்படிப்பட்ட தரித்திர நிலைமையில் இந்தியாவை இந்தியர்களிடம் கொடுத்திருக்கிறார்கள். அதையாவது முழுசாகக் கொடுத்தார்களா? நாட்டைப் பிளவு படுத்திக் கொடுத்தார்கள்.

பாகிஸ்தான் பிளவு மட்டுமா?

அறுநூற்றுச் சொச்சம் சுதேச சமஸ்தானங்களுக்குச் 'சுதந்திரம்' கொடுத்து விட்டு, "இஷ்டப்பட்ட

வர்கள் இஷ்டப்பட்ட ராஜ்யத்தில் சேரலாம்; அல்லது சேராமலும் இருக்கலாம்" என்று சொல்லி விட்டார்கள்!

இப்படி எல்லா விதத்திலும் அபாயகரமான நிலைமையில், படுமோசமான நிலைமையில், பரிதாபகரமான நிலைமையில், இந்தியா தேசத்தின் சுதந்திர ஆட்சிப் பொறுப்பை நமது ஒப்பற்ற மாபெருந் தலைவர்கள் பிரிட்டிஷாரிடமிருந்து ஒப்புக் கொண்டார்கள்.

ஒப்புக் கொண்டு ஆச்சரியமான முறையில் சமாளித்தும் வருகிறார்கள்!

அறுநூற்றுச் சொச்சம் சமஸ்தானங்களில் நைஜாம் ஒன்றைத் தவிர பாக்கி எல்லாச் சுதேச சமஸ்தானங்களையும் இந்தியப் பேரரசில் சேரும்படி செய்தார்களே?—அது ஒன்றைச் சொல்லுங்கள்! அந்த ஒரு காரியத்துக்காகவே ஜவாஹர்லால்ஜியின் சர்க்காருக்கு இந்திய மக்கள் என்றென்றும் கடமைப்பட்டவர்களாகிறார்கள்.

நைஜாமைப் போல் இன்று இந்தியாவில் உள்ள அறுநூறு சுதேச சமஸ்தானங்கள்—சின்னவையும் பெரியவையுமாக—சுதந்திர அரசு பாத்தியதை கொண்டாடினால் தேசம் எப்படிச் சின்ன பின்னப்பட்டு சர்வநாசத்தை எட்டிப் பார்த்துக் கொண்டிருக்கும் என்பதை எண்ணிப் பாருங்கள்!

• • •

பாகிஸ்தான் பிரிவினையின் விளைவாக யாரும் கனவிலும் எதிர்பாராத ஒரு பயங்கரமான நிலைமை பஞ்சாபில் ஏற்பட்டது. கொள்ளையும் கொலையும் கோரமும் தீ வைத்தலும் பாகிஸ்தான் எல்லையின் இருபுறத்திலும் தாண்டவமாடின.

இதன் காரணமாக, உலகம் இதுவரை கண்டிராத அளவில் ஜனங்கள் இடம் பெயர்ந்து செல்லத் தொடங்கினார்கள்.

பாகிஸ்தான் பகுதியிலிருந்த ஐம்பது லட்சம் ஹிந்து - சீக்கியர்கள் தங்களுடைய வீடு வாசல் நில புலம் நகை நட்டு மற்ற உடைமைகள் சகலத்தையும் இழந்து. ஜீவனோபாயத்தையும் இழந்து. அரையில் கட்டிய துணியுடனே இந்தியாவுக்குள் வந்து சேர்ந்தார்கள். சுலபமாக வந்துவிடவில்லை. அவர்களைக் கொண்டு வந்து சேர்ப்பதற்கு எவ்வளவோ கஷ்டப்பட வேண்டியதாயிற்று. அவ்வளவு அகதிகளுக்கும் இப்போது அன்னவஸ்திரமும் தங்க இடமும் தரவேண்டியிருக்கிறது. புதிதாக இராஜாங்கப் பொறுப்பு ஏற்றுக்கொண்ட எந்த சர்க்காரும் இவ்வளவு பெரிய பிரச்னையைச் சமாளிக்கும்படி நேர்ந்ததில்லை. உலக சரித்திரத்திலேயே உதாரணம் இல்லாத இந்த மகத்தான பெரிய பொறுப்பையும் ஜவாஹரின் சர்க்கார் எப்படியோ சமாளித்து வருகிறார்கள்.

ஜவாஹர்லால்ஜீ குடியிருக்கும் வீட்டு வாசலில் எப்போதும் இரண்டாயிரம் அகதிகள் நின்று ஓலமிட்டு வருகிறார்கள் என்றால், அந்த மகா புருஷனுடைய மனோ நிலைமை எப்படியிருக்குமென்று எண்ணிப் பாருங்கள்!

* * *

தேசத்தின் பாதுகாப்பு—தேசம் அடைந்திருக்கும் சுதந்திரத்தின் பாதுகாப்பு—எவ்வளவு கடினமான பயங்கரமான பொறுப்பாயிருக்கிறது என்பதையும் நம் கண் முன்னால் பார்த்துக் கொண்டு வருகிறோம்.

காஷ்மீரத்தில் ஏறக்குறைய முக்கால் லட்சம் எல்லைப்புறப் பட்டாணியர்கள் ஆயுதபாணிகளாய்ப் பிரவேசித்திருக்கிறார்கள். அங்கே மிகக் கடுமையான யுத்தம் மாதக் கணக்கில் நடந்து கொண்டு வருகிறது.

சென்ற வாரத்தில் ஜயஸல்மார் என்னும் இராஜபுத்திர சமஸ்தானத்தில் அதே எல்லைப்புறச் சாதியார் பிரவேசித்துக் கொள்ளையும் கொலையும் நடத்தியதாகச் செய்திகள் வந்தன.

தக்க நடவடிக்கை எடுத்துத் தடுக்காவிட்டால், இன்னும் பல இடங்களிலும் எல்லைப்புறச் சாதியார் பிரவேசிப்பார்கள். சந்து கண்ட இடமெல்லாம் புகுவார்கள். இந்தியா—பாகிஸ்தான் எல்லைக் கோடு ஆயிரம் மைல் நீளம் உள்ளது. இந்த ஆயிரம் மைல் எல்லையில் எங்கே வேணுமானாலும் அவர்கள் பிரவேசிக்கலாம்.

எல்லைப்புற மலைச் சாதியார் ஏறக்குறைய ஐந்து லட்சம் பேர்; அவ்வளவு பேரும் ஆயுதபாணிகள். சண்டையே அவர்களுடைய தொழில், ஜீவனம், தர்மம், மதம் எல்லாம்!

ஆறனைப்பட்ட பிரிட்டிஷாரையே அவர்கள் கண்ணிலே விரல் கொடுத்து ஆட்டினார்கள். எனவே, அவர்கள் தங்கள் மலைக்கோட்டைகளையும் குகைகளையும் விட்டு இந்தியாவுக்குள் பிரவேசியாமலிருப்பதற்கு லஞ்சம் அல்லது கப்பம் அல்லது பொருளுதவியாகப் பிரிட்டிஷ் சர்க்கார் அவர்களுக்கு வருஷந்தோறும் லட்சக்கணக்காகப் பணம் கொடுத்து வந்தார்கள்!

அவர்களைச் சமாளிக்கும் பொறுப்பு இப்போது பாகிஸ்தான் சர்க்காருடையது. பாகிஸ்தான் சர்க்கார் அவர்களுக்குப் பணம் கொடுக்கும் முறையைக் கையாளவில்லை; கையாளவும் மாட்டார்கள். எல்லைப்புற மலைச்சாதியாருக்கு வேறு போக்குக் காட்டிவிடுவது அவர்களுக்குப் பலவிதத்தில் சௌகரியமாயிருக்கும்!

அதாவது, பாகிஸ்தானுக்கு ஒரு பொறுப்புமில்லாமல் இந்தியாவிலே புகுந்து கொள்ளை கொலைகளை நடத்த ஐந்து லட்சம் வீரர்கள், — துணிச்சலுக்கும் குரூரத்துக்கும் பெயர் போனவர்கள் — தயாராயிருக்கிறார்கள்!

அதோடு, பாகிஸ்தானுக்கு இன்னும் ஒரு பெரிய வசதியும் இப்போது ஏற்பட்டிருக்கிறது.

மேற்குப் பாகிஸ்தானத்தில் ஹிந்து-சீக்கியர் பெயருக்கும் இல்லை. எல்லாரையும் ஓட்டையாண்டியாக்கித் துரத்தியாகிவிட்டது. பாக்கியிருப்பவர்கள் எல்லாரும் முஸ்லிம்கள். தீய பிரசாரத்தினால் துவேஷ மனப்பான்மை கொண்டவர்கள். எந்த நிமிஷமும் சண்டைக்குத் தயாராயிருப்பவர்கள். பாகிஸ்தானின் ஐந்தாம் படை அபாயம் லவலேசமும் இல்லை.

இந்தியாவிலேயோ சுமார் நாலு கோடி முஸ்லிம்கள் வசிக்கிறார்கள். அவர்களை நாம் சகோதரர்களெனக் கருதுகிறோம்; சம உரிமை கொடுக்கிறோம்; சர்க்கார் உத்தியோகங்கள் கொடுக்கிறோம்; அவர்களுக்கு எதுவும் நேராமல் தடுப்பதற்காக மகாத்மா காந்தி தமது உயிரைப் பணயம் வைத்து உண்ணாவிரதம் ஏற்கிறார்.

எனினும், நெருக்கடியும் சோதனையும் ஏற்படும் காலத்தில் இந்த நாலு கோடி முஸ்லிம்களில் எல்லாரும் இந்தியாவுக்கு உண்மையாக நடந்து கொள்வார்களா என்று யாராவது உத்தரவாதம் கொடுக்க முடியுமா? முடியாது.

பழைய முஸ்லிம் லீக் பிரசாரத்தினாலும் இப்போதைய பாகிஸ்தான் பிரசாரத்தினாலும் எத்தனை பேருடைய உள்ளம் கெட்டுத் துவேஷம் என்னும் விஷத்துக்கு இலக்காகியிருக்குமோ, யார் சொல்ல முடியும்?

* * *

அயல் நாட்டினர் — ஆங்கிலேயர், அமெரிக்கர், ஐரோப்பியர் ஆகியோர் — சுதந்திர இந்தியாவுக்குச் சாதகமாயிருக்க மாட்டார்கள் என்று இப்போது தெரிந்து போய்விட்டது. இந்தியாவுக்கு நியாயம் செய்யவும் அவர்களுக்கு விருப்பமில்லை. யு. என். ஓ. என்னும் அகில உலக ஐக்கிய தேச மகா சபையில் காஷ்மீர் பிரச்னையை எவ்வளவு இலட்சணமாகத் தீர்த்து வைக்கிறார்கள் என்பதைப் பாருங்கள்!

உண்மையில் இந்தியாவும் பாகிஸ்தானும் சண்டை போட்டுக் கொண்டிருந்தால்தான் அமெரிக்கருக்கும் ஐரோப்பியருக்கும் சந்தோஷம். அப்போதுதான் 'இந்தியர்கள் அநாகரிக மக்கள்' என்று சொல்லலாம். அப்போதுதான் 'இந்தியர்கள் சுதந்திரத்துக்குத் தகுதியுடையவர்கள் அல்ல. — பிரிட்டிஷார் அவசரப்பட்டுச் சுதந்திரம் கொடுத்து விட்டார்கள்!' என்று பிரசாரம் செய்யலாம். மொத்தத்தில் ஆசிய மக்கள் தலையெடுத்து மேனாட்டாரை விட முன்னேறிப் போக முடியாமல் பார்த்துக் கொள்ளலாம்!

இவ்வளவுடன், லாகூருக்கு அருகில் உள்ள பாகிஸ்தான் ஆயுதத் தொழிற்சாலையில் இரவு பகல் வேலை நடந்து கொண்டிருக்கிறது என்று சென்ற வாரத்தில் வந்த செய்தியையும் சேர்த்து யோசித்துப் பாருங்கள்!

அமெரிக்காவிலிருந்தும் ஐரோப்பாவிலிருந்தும் பாகிஸ்தானத்துக்கு ஆயுதங்கள் வருவதற்கு வேண்டிய வசதிகள் இருக்கின்றன. பணம் கொடுத்து உதவி செய்ய நைஜாமும் இருக்கிறார். உலகத்திலேயே பெரிய பணக்காரர் நைஜாம் மன்னர்! — இதையும் சேர்த்து யோசித்துப் பாருங்கள்!

அப்போது நிலைமை நன்றாக விளங்கும். இந்தியா எவ்வளவு நெருக்கடியான கட்டத்தில் இருக்கிறது என்றும் நமது தலைவர்கள் எவ்வளவு பெரிய மகத்தான பொறுப்பை வகிக்கிறார்கள் என்றும் தெளிவாகும்.

• • •

தேசத்தை வெளிப் பகைவர்களிடமிருந்து காப்பாற்றத் தக்க ஏற்பாடு செய்ய வேண்டும். உள்நாட்டில் உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டும்; துணி உற்பத்தி அதிகமாக வேண்டும். பெரிய பெரிய தொழிற்சாலைகளை அமைக்க வேண்டும்; அவற்றில் இரும்பை உருக்க வேண்டும்; இயந்திரங்களைச் செய்ய வேண்டும்; ஆயுதமும் காகிதமும் செய்ய வேண்டும்; இன்னும் ஆயிரமாயிரம் தொழில்கள் நாடெங்கும் ஓங்க வேண்டும். அதன் மூலமாகச் செல்வம் பெருக வேண்டும்; வறுமை ஒழிய வேண்டும்.

இவ்வளவையும் செய்து முடிக்கும் ஆற்றல் உடையவர்கள் நம் மாபெருந் தலைவர்கள். உலகம் காணாத அதிசயமான முறையில் இந்தியாவுக்குச் சுதந்திரம் வாங்கிக் கொடுத்தவர்கள் யார்? ஹிட்லரையும் முஸோலினியையும் வென்ற பிரிட்டிஷாரை இந்தியாவை விட்டுப் போகும்படி செய்தவர்கள் யார்? இன்றையதினம் தொழிலாளர் தலைவர்கள் என்று சொல்லிக் கொண்டு எப்போது வேலைநிறுத்தம் செய்யத் தூண்டலாம் என்று சமயம் பார்த்துக் கொண்டிருப்பவர்களா? அல்லது மகாத்மா காந்தி, பண்டித ஜவாஹர்லால் நேரு முதலிய நம் மாபெருந் தலைவர்களா?

அத்தகைய தலைவர்கள் முப்பது வருஷ காலம் மகத்தான தியாகங்களைச் செய்து வருஷக் கணக்காகச் சிறையிருந்து போராடி இந்தியாவின் விடுதலையைத் தேடித் தந்ததெல்லாம் எதற்காக? சில முதலாளிகளும், பணக்காரர்களும், நிலச்சுவான்தார்களும், சுதேச ராஜாக்களும் சுகபோகங்களுடன் வாழ்வதற்காகவா?

ஒரு நாளும் இல்லை. அப்படியானால் நம் தலைவர்கள் அத்தகைய மகத்தான தியாகங்களைச் செய்திருக்கவேண்டிய அவசியமே இல்லை.

ஏழை எளியவர்களுக்காகவும், பாடுபட்டு உழைக்கும் தொழிலாளிகளுக்காகவும், மற்றும் கோடிக் கணக்கான சாதாரணக் குடித்தனக்காரர்களுக்காகவுமே நம் தலைவர்கள் இந்தியாவின் சுதந்திரம் கோரினார்கள்; பெற்றார்கள்.

இதோ நாளை வரப்போகும் பொதுத் தேர்தலில் மேற்கூறிய ஏழை எளியவர்கள், தொழிலாளிகள், குடியானவர்கள், சாதாரணக் குடித்தனக்காரர்கள், வியாபாரிகள் முதலியோர் தான் வோட்டுக் கொடுக்கப் போகிறார்கள். அவர்கள் தேர்ந்தெடுத்த பிரதிநிதிகள் தான் சுதந்திர இந்தியாவை ஆளப் போகிறார்கள்.

முப்பது வருஷம் போராடிச் சுதந்திரம் பெற்றுத் தந்த தலைவர்கள் அந்தச் சுதந்திரத்தை நீடித்து நிலைத்திருக்கும்படி ஏற்பாடு செய்வதற்கு மூன்று வருஷம் கேட்கிறார்கள்.

அந்த மூன்று வருஷத்தில் நாட்டிலே வேலை நிறுத்தங்களும் கதவடைப்பும் கூடாது என்று சொல்கிறார்கள். யுத்த காலத்திலே செய்தது போல நாட்டிலுள்ள அனைவரும் உழைத்துப் பாடுபட வேண்டும் என்று சொல்கிறார்கள்.

இப்படி ஒரு மூன்று வருஷத்துக்கு வேலை நிறுத்தம் கூடாது என்று இரண்டு மாதத்துக்கு முன்னால் புது டில்லியில் ஓர் ஒப்பந்தம் செய்யப்பட்டது. தொழிலாளர் தலைவர்கள் அதை ஒப்புக் கொண்டார்கள்.

ஆனால் அந்த ஒப்பந்தத்துக்கு விரோதமாக நாடெங்கும் காரியங்கள் நடக்கின்றன. அற்பமான அரசியல் பதவிகளுக்கு ஆசைப்பட்டு நாடெங்கும் தொழிலாளர்களைத் தூண்டிவிட்டு வேலை நிறுத்தங்களை உண்டு பண்ணி வருகிறார்கள் சில புண்ணியவான்கள்!

பெற்ற தாயை, உயிருக்கு உயிராய்த் தன்னிடம் அன்பும் ஆசையும் வைத்திருக்கும் அன்னையை, கிணற்றிலே பிடித்துத் தள்ள முயலும் குழந்தையின் காரியம் இது. தன்னுடைய தாகத்தைத் தணிக்கவே தாயார் தண்ணீர் மொள்கிறாள் என்று தெரியாமல் கோபித்துக் கொள்ளும் முட்டாள் குழந்தையின் காரியம் இது!

• • •

சென்ற வாரத்தில் காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டம் கூடி வேலை நிறுத்தங்கள் சம்பந்தமாக நிறைவேற்றிய தீர்மானம் பத்திரிகைகளில் வெளியாகியிருக்கிறது. தீர்மானத்தின் வாசகம் மிகவும் கடுமையாகத்தானிருக்கிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் வேலை நிறுத்த முறையைக் கையாளுவது தேசத் துரோகம் என்றும் சமூகத் துரோகம் என்றும் காரியக் கமிட்டியின் தீர்மானம் சொல்கிறது. தன்னுடைய நன்மை தனக்குத் தெரியாத அசட்டுக் குழந்தையிடம் அன்னைக்கு ஏற்படக்கூடிய கோபம் மேற்படி தீர்மானத்தில் பிரதிபலிக்கிறது.

அதற்கு மறுதினமே இந்தியாவின் பொருளாதார அமைப்பைப் பற்றிக் காங்கிரஸ் சப் கமிட்டி தயாரித்திருக்கும் யோசனைகளும் வெளியாகியிருக்கின்றன. அந்த யோசனைகள் "உழைப்பவனுக்கு உழைப்பின் ஊதியம் சேரவேண்டும்" என்ற அடிப்படையில் அமைந்திருப்பதைக் காணலாம்.

நியாயவுணர்ச்சியும் தீர்க்கதரிசனமுமான காங்கிரஸ் மேலோரின் வேண்டுகோளுக்குச் செவி சாய்க்கும்படி தொழிலாளர் சமூகத்தைக் கேட்டுக் கொள்கிறோம். நமது ஒப்பற்ற தலைவர்களுக்கு மூன்று வருஷத் தவணை கொடுக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

சுதந்திர இந்திய சர்க்காரின் கவர்னர் ஜெனரல் மவுண்ட்பாட்டன் தம்பதிகளை நமது மாகாணப் பிரதம மந்திரி ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் கைகுலுக்கி வரவேற்கிறார்.

சென்னை நகர சபையின் சார்பாக மேயர் டாக்டர் கிருஷ்ணராவ் லார்டு மவுண்ட்பாட்டனுக்கு உபசாரப் பத்திரம் வாசித்தளித்தார்.

# பாட்டனும் பாட்டியும்

சென்ற வாரத்தில் சென்னை நகரம் அமர்க்களப்பட்டது. இந்தியாவின் புகழ் பெற்ற கடைசி மாஜி ராஜப் பிரதிநிதியும் கடைசி ஆங்கில கவர்னர் ஜெனரலுமான லார்ட் மவுண்ட் பாட்டனும், அவருடன் லேடி மவுண்ட் பாட்டியும் விஜயம் செய்தார்கள். பாட்டன்—பாட்டி ஆனபோதிலும் பருவம் வாலிபப் பருவம்தான். அதிலும் மவுண்ட்பாட்டனோ, ரோமான் நொவாரோ முதலிய ஹாலிவுட் நட்சத்திரத்தைப்போல் பிரகாசிக்கிறார்!

முன்னே யெல்லாம் கவர்னர் ஜெனரல் விஜயம் என்றால், அவருக்காக ஸ்பெஷல் ரயில் வரும். ஸ்பெஷல் வரும் சமயம் ரயில் பாதை தண்டவாளத்தின் இரு பக்கங்களிலும் தந்தி மரங்களுக்குப் போட்டியாக போலீஸ் ஜவான்களும், கிராம அதிகாரிகளும், தலையாரிகளும் நின்றுகொண்டிருப்பார்கள். இரவு நேரமாயிருந்தால் கையிலே தீவர்த்தி பிடித்துக்கொண்டு நிற்பார்கள். இப்போது அதெல்லாம் போயே போய் விட்டது. கவர்னர் ஜெனரல்களும் அவர்களுடைய எஜமானிகளும ஆகாச விமானத்தில் பறந்து வருவது என்று ஏற்பட்டு விட்டது. ஆகாச மார்க்கத்திலே இருபுறமும் தீவர்த்தி பிடித்த மனிதர்கள் நிற்க முடியாதது ஒரு குறைதான். அது கிடக்க.

* * *

லார்ட் மவுண்ட் பாட்டனும் லேடி மவுண்ட் பாட்டியும் சென்னை நகருக்கு விஜயம் செய்து சில தினங்கள் தங்கியிருந்த போது பலமுறை நகரில் அங்குமிங்கும் போய் வந்தார்கள். (இவர்களுடைய விஜயத்தை முன்னிட்டு வருஷக் கணக்காகச் சுண்ணாம்பு கண்டறியாத பல பாலங்களின் சுவர்களுக்கு வர்ணச் சுண்ணாம்பு பூசப்பட்டிருந்தது!) பாட்டனும் பாட்டியும் பல பார்ட்டிகளுக்கு விஜயம் செய்தார்கள். மந்திரிமார்களாலும் நகர சபை மேயராலும் சிற்றுண்டி விருந்துகள் அளிக்கப்பட்டன. இந்த விருந்துகள் நடந்தபோது கவர்னர் ஜெனரல் தம் மேஜையை விட்டு எழுந்து போய் வேறு மேஜைகளில் உட்கார்ந்து ஆங்காங்கு இருந்தவர்களை அறிமுகம் செய்து கொண்டு பேசினார். பின்னோடு, கனம் டாக்டர் சுப்பராயன் ஒவ்வொரு மேஜையாகச் சென்று விருந்தினரை அறிமுகம் செய்து வைத்தார். நமது உள்நாட்டு மந்திரியே உள்நாட்டு மந்திரிதான்! அவர் ஒருவர் மட்டும் இல்லாவிட்டால், இந்த மாதிரி 'பார்ட்டி'களில் மற்ற மந்திரிகள் ரொம்பவும் சங்கடப்பட்டுப் போவார்கள். ஒரு விஷயம் பாருங்கள். லார்ட் மவுண்ட் பாட்டன் தமது மேன்மை தங்கிய தர்ம பத்தினியுடன் விஜயம் செய்திருக்கிறார். அவர்களை உபசரித்து வரவேற்பதற்கு இங்கேயும் வாழ்க்கைத் துணைவிகள் வேண்டுமல்லவா? நமது பிரதம மந்திரியும் உணவு மந்திரியும் அந்த பாக்கியத்தை இழந்து விட்டவர்கள். கல்வி மந்திரியோ கட்டைப் பிரம்மச்சாரி. ஏதோ ஸ்ரீமதி ராதாபாய் சுப்பராயன் அவர்களும் ஸ்ரீமதி குட்டியம்மாளு அவர்களும் இருந்து சென்னை மாகாணப் பெண்குலத்தின் கௌரவத்தை நிலைநாட்டினார்கள். அவர்களுக்கு நமது வணக்கம்.

* * *

இந்தியாவின் கடைசி கவர்னர் ஜெனரலான லார்ட் மவுண்ட்பாட்டன் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் சிறந்த யுத்த நிபுணர்களில் ஒருவர். சென்ற மா பெரும் யுத்தத்தின் போது அவருடைய போர்க் கலைத் திறமையோடு அரசியல் நிபுணத்துவமும் நன்கு வெளியாயின. இது காரணமாகவே ஆட்லியைத் தலைவராகக் கொண்ட பிரிட்டிஷ் தொழிற் கட்சி சர்க்கார், மிகச் சிக்கலான இந்தியப் பிரச்னையைத் தீர்த்து வைக்கும் பொருட்டு மவுண்ட்பாட்டனைக் கடைசிக் கவர்னர் ஜெனரலாக அனுப்பி வைத்தார்கள். நாளது 1948-ஜூன் மாதக் கடைசிக்குள்ளே அரசாங்க அதிகாரத்தை முழுதும் இந்தியர் கைக்கு மாற்றிவிட வேண்டும் என்று சொல்லி அனுப்பினார்கள். 'வெட்டிக் கொண்டு வா!' என்றால், கட்டிக் கொண்டு வரக்கூடிய கெட்டிக்காரரான மவுண்ட் பாட்டனோ,

சென்ற வருஷம் ஆகஸ்டு 15உ யன்றே அந்தக் காரியத்தைச் செய்து முடித்து விட்டார். இந்தியாவைப் பிரிக்கும் விஷயத்தில் அவர் காட்டிய அவசரமும் திறமையும் பிரமாதம். அதுபோலவே அதிகாரத்தை மாற்றிக் கொடுக்கும் விஷயத்திலும் அவசரமும் ஆற்றலும் காட்டினார்.

துரதிர்ஷ்டவசமாக, இந்தியாவில் ஏற்கெனவே பழம் தின்று கொட்டை போட்டவர்களான அதிகாரவர்க்கத்தாரும் இராணுவ நிபுணர்களும் மவுண்ட் பாட்டனுடைய அவசரத்தை உணர்ந்து அவருடன் ஒத்துழைக்கவில்லை. பழைய 'பிரித்தாளும் கொள்கை'யையே அவர்கள் நினைத்துக் கொண்டு, பாகிஸ்தான் பிரிவினையும் அதில் சேர்ந்ததுதான் என்று எண்ணியிருந்து விட்டார்கள்! இது காரணமாகப் பஞ்சாபில் புகைந்து கொண்டிருந்த எரிமலை விஷயமாக அவர்கள் முன் ஜாக்கிரதை எடுத்துக் கொள்ளவில்லை. மவுண்ட்பாட்டன் இந்தியாவுக்குச் செய்த மலைபோன்ற தொண்டுக்குக் களங்கம் உண்டாகும்படியான பயங்கரங்கள் பஞ்சாபில் நிகழ்ந்தன.

• • •

சென்ற ஆகஸ்டு 15உ யன்றே லார்ட் மவுண்ட் பாட்டன் கப்பலேறச் சித்தமாயிருந்தார். நமது காங்கிரஸ் தலைவர்கள் மிக்க முன் யோசனையுடனும் அரசியல் மேதையுடனும் மவுண்ட் பாட்டனையே இன்னும் சிலகாலம் கவர்னர் ஜெனரலாக இருக்கும்படி நியமித்தார்கள். ஆகவே இந்தியர்களால் நியமிக்கப்பட்ட முதல் ஆங்கில கவர்னர்-ஜெனரலாக அவர் இன்று விளங்குகிறார்; உலக சரித்திரத்திலும் விளங்குவார் என்று எதிர்பார்க்கலாம்.

லார்ட் மவுண்ட்பாட்டன் நமது இந்தியப் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லாலுக்கு மிகவும் வேண்டிய அந்தியந்த நண்பர் என்று சொல்கிறார்கள். இந்த நட்புக்கு அறிகுறியாகவே, 'பண்டிட் மவுண்ட்பாட்டனுக்கு ஜே!' என்ற கோஷத்தை மவுண்ட் பாட்டன் தமது பிரசங்கம் ஒன்றில் குதூகலத்துடன் குறிப்பிட்டார். பிறகு மேற்படி கோஷம் நாடெங்கும் பரவியிருக்கிறது!

• • •

லார்ட் மவுண்ட் பாட்டன் இப்போது செய்யும் சுற்றுப் பிரயாணம் வருங்காலத்தில் அவருக்கு மிகவும் உபயோகமாயிருக்கலாம். யார் கண்டது? ருஷியா ஒரு பக்கத்திலும், அமெரிக்காவும் பிரிட்டனும் இன்னொரு பக்கத்திலும் நின்று உலகத்தை இன்னொரு மாபெரும் சர்வநாச யுத்தத்துக்குத் தயார் செய்து கொண்டு வருகின்றன. ஆயிற்று; ஐரோப்பாவை இரண்டாகப் பிளந்து நடுவிலே ஒரு பெரிய கருப்புத்திரையும் விட்டாயிற்று!

ஏது எப்படியாகுமோ, எப்போது அணுகுண்டு யுத்தம் தொடங்குமோ என்று சொல்ல முடியாத நிலைமை உலக அரசியலில் ஏற்பட்டிருக்கிறது. ஆட்லியும் பெவினும் பகிரங்கமாகவே ருஷியாவின் உலக ஆதிக்க ஆசையைத் தாக்குவது என்றால், பார்த்துக் கொள்ளுங்கள்!

யுத்தம் என்று ஏற்பட்டால், மவுண்ட் பாட்டன் அதில் ஒரு முக்கியமான பொறுப்பு வகித்தே தீரும்படியிருக்கும். அவருடைய இந்தியச் சுற்றுப்பிரயாணம் அச்சமயம் ஏதேனும் ஒரு விதத்தில் பயன்படாது என்று யார் சொல்ல முடியும்?

• • •

லார்ட் மவுண்ட் பாட்டன் சென்னை நகர வாசிகளின் அபிமானத்தைப் பெரிதும் கவர்ந்து விட்டார் என்று சொல்ல வேண்டும். திறந்த மோட்டார் வண்டியில் மவுண்ட் பாட்டனும் மவுண்ட் பாட்டியும் செல்லும் சமயங்களில் இருபுறமும் சென்னைப் பொது மக்கள் கூட்டம் கூடி நின்றார்கள். அவர்களுக்கெல்லாம் இடைவிடாமல் சலாம் போட்டுக் கொண்டு மவுண்ட் பாட்டன் சென்றார். அப்பா! அவருடைய வலது கை ரொம்ப ரொம்ப வலித்திருக்க வேண்டும். கவர்னர் ஜெனரல் பதவி என்றால் இலேசா, என்ன? தலைவலியோடுகூடக் கைவலியுந்தான்!

ஏற்கெனவே நாம் மவுண்ட் பாட்டனிடம் அபிமானம் கொள்ளப் பல காரணங்கள் இருக்கின்றன. அவற்றோடு "தமிழ் பேசிய கவர்னர் ஜெனரல்" என்ற காரணமும் இப்போது சேர்ந்திருக்கிறது. (தமிழுக்கு யோகம் எப்படியெல்லாம் வருகிறது, பாருங்கள்!) ஆயிரக் கணக்கான சாரணச் சிறுவர்கள் கூடியிருந்த கூட்டத்தில் கவர்னர் ஜெனரல் மவுண்ட் பாட்டன் திடீரென்று தமிழில் பேச ஆரம்பித்துச் சிரிப்பையும் திகைப்பையும் உண்டு பண்ணினார்! "எல்லோருக்கும் என் ஆசீர்வாதம்!" என்று பேச்சை முடித்தார்! பலே 'இல்லாடி' கவர்னர் ஜெனரல், போங்கள்!



# நச்சுப் பொய்கை

மஹாபாரத காலத்தில் மட்டுமல்ல. ஒவ்வொரு தண்ணீர்த் தேக்கமும் ஒரு நச்சுப் பொய்கையாகி விடலாம். பாசியும், அழுகிய தாவரங்களும் நிறைந்த ஒவ்வொரு தேக்கத்திலிருந்தும் எடுத்து உபயோகிக்கப்படும் சிறிதளவு தண்ணீரே எண்ணிறந்த நோய்களுக்கும், அவைகள் பரவுவதற்கும் காரணமாகின்றது. இன்று ரசாயன நிபுணர்கள், கிருமி ஆராய்ச்சியாளர்களின் உதவியால் மக்களின் உபயோகத்திற்கான தண்ணீர் நன்கு சுத்தப்படுத்தித் தரப்படுகின்றது. தண்ணீரை சுத்தப்படுத்துவதற்கு, 'குளோரின்' உபயோகம் சிறந்ததென கருதப்படுகிறது. இதற்கு குளோரின் வாயு, குளோரின் திரவம் பிளீச்சிங் பவுடர், இவை உகந்தவை.

மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் குளோரின் தயாரிப்புகள் நம் நாட்டில் எண்ணிறந்த தண்ணீர் ஸப்ளை ஸ்தாபனங்களால் எப்போதும் உபயோகப் படுத்தப் படுகிறது.




'காவேரி பிராண்ட்', குளோரின் திரவம் எஃகுக் குழாய்களில் நிரப்பப்பட்டு சப்ளை செய்யப் படுகின்றன.




வெளியிடுவோர்:

மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்
மேட்டூர் அணை, சேலம்.

மானேஜிங் ஏஜண்டுகள்:

சேஷசாயி பிரதர்ஸ் லிமிடெட், திருச்சிராப்பள்ளி

---

பூரண விற்பனை ஏஜெண்டுகள்:—

அலைட் இண்டஸ்ட்ரியல் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ் லிமிடெட்
தலைமை ஆபீஸ்: 120, அரண்மனைக்காரத் தெரு, மதராஸ்-1

கிளை ஆபீஸ்கள்:

பெஜவாடா, கோயமுத்தூர், கள்ளிக்கோட்டை, கும்பகோணம், ஹைதராபாத், மேட்டூர் அணை, சேலம், திருச்சிராப்பள்ளி, திருவனந்தபுரம்.



# அவன் கேள்வி

விந்தன்

உயிர் ஆசை யாரையும் விடாது என்பார்கள். ஆனால் அந்தக் கிழவனுக்கோ தன் உயிரின்மீது அணுவளவும் ஆசையில்லை. அவனுக்குத் தன்மீது ஆசையில்லாவிட்டாலும் உயிர் அவன்மீது அளவற்ற ஆசை வைத்திருந்தது. கிழவன் என்ன செய்வான், பாவம்! ஒரே படுக்கையாய்க் கிடந்தபடி தன் உயிரோடு மன்றாடிக் கொண்டிருந்தான்.

அன்று மாலை அந்த ஊர் ஆலையின் சங்கு ஊதி ஓய்ந்ததும், வழக்கம்போல் அந்தக் கிழவனின் முகம் மலர்ந்தது. "பையன் இன்னும் கொஞ்ச நேரத்திற்கெல்லாம் வந்துவிடுவான்!" என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். ஏனெனில், அந்த ஆலையில்தான் அவனுடைய மகன் கண்ணுச்சாமி வேலை செய்து வந்தான்.

அவ்வாறு சொல்லிக் கொண்டதில் கிழவனுக்கு ஏதோ ஒருவிதமான மகிழ்ச்சி. இத்தனைக்கும் 'அந்தப் பையன்' வந்து அவனுக்குப் புதிதாக ஆகப் போவது ஒன்றுமே யில்லை.

கிழவன் எதிர்பார்த்தபடி கண்ணுச்சாமி அவ்வளவு சீக்கிரமாக அன்று வீட்டுக்கு வந்துவிடவில்லை; அவனுக்குப் பதிலாக இருள்தான் அவசர அவசரமாக வந்து அவன் வீட்டைக் கவ்விக் கொண்டது.

"ஏ, முனியம்மா! முனியம்மா! எங்கே அம்மா, போயிட்டே?" என்று கிழவன் இரைந்தான்; பதில் இல்லை.

"எங்கே போயிருப்பா? வீட்டிலே கொஞ்சம் விளக்கையாச்சும் ஏத்தி வச்சட்டுப் போயிருக்கக் கூடாதோ?"

இதற்குள் யாரோ வரும் காலடி ஓசை அவன் காதில் விழுந்தது. "முனியம்மா!" என்றான் கிழவன் மீண்டும்.

"ஏன்!"

"எங்கே அம்மா, போயிட்டே? பொழுதோட விளக்கைக் கொஞ்சம் ஏத்தி வைக்கக் கூடாதா?"

"அதுக்குத்தான் தீக்குச்சி வாங்கிவரப் போயிருந்தேன்!"

"வேறே யாரு வீட்டு விளக்கிலாச்சும் ஏத்தி வந்து வச்சட்டு, அப்புறமாப் போய்த் தீக்குச்சி வாங்கிட்டு வந்தா என்ன? ரொம்ப இருட்டிப் போச்சே!"

"வேறே யாரு வீட்டிலாச்சும் விளக்கை ஏத்தப்போனா சும்மா இருப்பாங்களா, என்ன? அவங்க வீட்டு லச்சுமி நம்ம வீட்டுக்கு வந்துட்டான்னு சண்டை பிடிக்க மாட்டாங்களா!"

"அட எழவே! அப்படின்னா நம்ம தரித்திரம் சுலபமாத் தொலையறதுக்கு ஒரு வழி இருக்கிறாப் போலிருக்குதே!"

"என்ன வழி, அது?"

"யாராச்சும் ஒரு பணக்காரப் பய வீட்டுக்குப் போய் அவனுக்குத் தெரியாம ஒரு நாளைக்கு நம்ம வீட்டு விளக்கை ஏத்திக்கிட்டு வந்துட்டா, அவன் வீட்டு லச்சுமி நம்ம வீட்டுக்கு வந்துடுவா, இல்லையா?"

இதைக் கேட்டதும் முனியம்மாள் சிரித்தாள்; கிழவனும் ஒருகணம் தன் கவலையை மறந்து அவளுடைய சிரிப்பில் கலந்து கொண்டான்.

சிறிது நேரத்துக்குப் பிறகு குழந்தை அழும் சத்தமும், அந்தக் குழந்தையை முனியம்மாள் அதட்டி அடிக்கும் சத்தமும் கிழவன் காதில் விழுந்தது.

"என்னத்துக்குக் குழந்தை அழுகுது? என் அதைப் போட்டு நீ அப்படி அடிக்கிறே?" என்று கிழவன் கேட்டான்.

"இந்த வாரத்து உரிசிதான் நேத்தோடே ஆயிடுச்சே! அத்தனை சோள மா வீட்டிலே கிடந்துச்சி. அதையாச்சும் நாலு ரொட்டியாத் தட்டி உழைச்சிட்டு வர 'அந்த மனிச'னுக்கு வைக்கலாம்னு பார்த்தா, இந்தப் பேய்ப் பிள்ளே அது மாவாயிருக்கிறபோதே தின்னுப்பிடணும்னு ஒரேயடியாய்ப் பிடிவாதம் பிடிச்சுத் தொலைக்கிறது!"

"குழந்தைக்குப் பசி போல இருக்குது! சுருக்க ஒரு ரொட்டி சுட்டு அதன் கையிலே கொடேன்!"

"எல்லாம் கொடுத்தேன்! சுட்ட ரொட்டி வேணாமாம்; மாவுதான் பச்சையாவே வேணுமாம்!"

"சரிதான்! சோள ரொட்டியினுடைய லட்சணம் நம்ம குழந்தைக்கும் தெரிஞ்சு போச்சாக்கும்! அந்தப் பாழும் ரொட்டி தொண்டையை விட்டுக் கீழே இறங்கினாத் தானே? அதுக்குத்தான் அதைப் பச்சை மாவாவே தின்னுப்பிடணும்னு குழந்தை பார்க்கிறது!"

"சோள ரொட்டி இறங்கலேன்னு, அப்பாவைக் கிளாக்ஸோ பிஸ்கட் வாங்கி வந்து தரச் சொல்லிச் சாப்பிடறது தானே? நானு வேண்டாமுங்கிறேன்!" என்று முனியம்மாள் அந்தக் குழந்தையின் கன்னத்தில் எரிச்சலுடன் ஓர் இடி இடித்தாள்.

"குழந்தைகிட்ட உன் கோவத்தைக் காட்டாதே, முனியம்மா! அது கிளாக்ஸோ பிஸ்கட்டுக்கு எங்கே போவும்? அதன் அப்பன்தான் எங்கே போவான்?" என்றான் கிழவன்.

இந்தச் சமயத்தில் கண்ணுச்சாமி உள்ளே நுழைந்து மௌனமாகச் சட்டையைக் கழற்றிக் கொடியில் போட்டான்.

அவனைக் கண்டதும், "என்டா தப்பா, இவ்வளவு நேரம்?" என்று கேட்டான் கிழவன்.

"எங்க சங்கத்திலே இன்னிக்கு ஒரு மீட்டிங்கு; அதுக்குப் போயிருந்தேன்!" என்றான் கண்ணுச்சாமி.

"மீட்டிங்காவது, கீட்டிங்காவது! பொழுதோடே வீட்டுக்கு வந்து சேராம?"

"அதெப்படி வந்துவிட முடியும்? ஸ்டிரைக் கமிட்டியிலே நானுமில்லே ஒரு மெம்பரா யிருக்கேன்!"

"என்னது அது, என்னது அது ...?"

"ஸ்டிரைக் கமிட்டியிலே ......"

"ஸ்டிரைக்குமாச்சு, மண்ணுமாச்சு! வேலை செய்யும்போதே வயித்துச் சோத்துக்கு வழியைக் காணோம் — ஸ்டிரைக்காம், ஸ்டிரைக்கு!"

"அப்படித்தான் நானும், இன்னும் என்னைச் சேர்ந்த நாலைந்து பேரும் சொன்னோம். நம்ம தலைவர்களும் அப்படித் தானே சொல்றாங்க — முதல்லே உற்பத்தியைப் பெருக்கி ஊரிலே இருக்கிற பஞ்சத்தை ஒழிக்க; அதுதான் உங்க கடமை; அப்புறம் உங்க உரிமையைப் பற்றிப் பேசிக்கலாம்னு......!"

"ஆமா! அதுவரை உடம்பிலே உசிரு இருந்தா இல்லே!" என்று நடுவில் முனியம்மாள் குறுக்கிட்டாள்.

"சீ, சும்மா இரு! ஸ்டிரைக் செஞ்சா மட்டும் உடம்பிலே உசிரு வந்துடுமா? இருக்கிற உசிருமில்லே போயிடும்?"

"பொம்பளைக்கு என்னத்தைத் தெரியும்? நீ விசயத்தைச் சொல்லு!" என்றான் எல்லாம் தெரிந்த ஆண்பிள்ளையான கிழவன்.

"என்னத்தைச் சொல்றது? கமிட்டியிலே எங்க கட்சிக்குப் பலமில்லே; ஸ்டிரைக் செய்யணும்னு சொல்ற கட்சிதான் ஜெயிச்சுடும்போல இருக்குது!"

"அட பாவிப் பயல்களா! தின்ற சோத்திலே இப்படியும் மண்ணை அள்ளிப் போட்டுக்கிடுவாங்களா?"

"யாரும் தான் சாக மருந்து தின்ன மாட்டாங்க; பிழைக்கத்தான் மருந்து தின்னுவாங்க!" என்றாள் முனியம்மாள்.

"என்ன, முனியம்மா! ஏது, உனக்கு வாய் ரொம்ப நீண்டு போச்சே! வேலை செஞ்சி மாசம் பொறந்தா சம்பளம் வாங்கிட்டு வரும்போதே நீ





'செத்து பட்டினி, மூத்தா நான் பட்டினி'ங்கிறே. அதுவுமில்லேன்னு என்னத்தைச் செய்வே?" என்று கேட்டான் கண்ணுச்சாமி.

"பாடு பட்டும் 'பசி, பசி'ன்னு பரிதவிக்கிறதை விட, பாடு படாமலே பரலோக மோட்சம் போய்ச் சேர்ந்துடலாமில்லே?" என்றாள் முனியம்மாள்.

"அதுக்கும் நாளு வரவேணுமா? அந்த நாளு வந்துட்டா தன்னாலே போய்ச் சேர்ந்துடறோம்!" என்றான் கண்ணுச்சாமி.

"ஐயோ! இந்த இளம் வயசிலே நீங்க இப்படி உலகத்தை வெறுத்துப் பேசற கண்றாவியை நான் எங்கே போய்ச் சொல்லி அழுவேன்? பாழும் எமனும் என்னை மறந்துட்டான் போலேயிருக்குது; நான் வேறே உங்களுக்குப் பாரமா நின்னு இருந்துகிட்டு இருக்கேன்!" என்றான் கிழவன்.



இந்தச் சமயத்தில், "அந்த ரொட்டி ஆறிப் போவுது; எடுத்துக்கிட்டு வரட்டுமா?" என்று தன் கணவனை நோக்கிக் கேட்டாள் முனியம்மாள்.

"சரி, எடுத்துக்கிட்டு வா! எரியிற வயித்துக்கு எதையாச்சும் போட்டு அடைக்க வேண்டியதுதானே!" என்றான் கண்ணுச்சாமி.

அவன் தன் கை கால்களை அலம்பிக் கொண்டு வருவதற்கும், முனியம்மாள் ரொட்டி கொண்டு வந்து வைப்பதற்கும் சரியாயிருந்தது. அதில் ஒன்றை எடுத்துக் கடித்துக் கொண்டே, "அப்பாவுக்குமா இந்த ரொட்டி?" என்று கேட்டான் கண்ணுச்சாமி.



"இல்லே, அரிசி குத்தப்போ விழுந்த நட்டையெல்லாம் சேர்த்து வச்சிருந்தேன். அதை இன்னைக்கு எடுத்துப் புடைச்சுப் பார்த்தேன்; ஒரு கையளவு நொய் தேறிச்சு. அந்த நொய்யைக் கஞ்சியாக் காய்ச்சி அவருக்குன்னு எடுத்து வச்சிருக்கேன்!"

"நல்ல வேலை செஞ்சே! அவரு இன்னும் கொஞ்ச நாளைக்கு அந்த 'ஸ்பெசலு கஞ்சி'யைக் குடிச்சி நமக்குத் துணையாயிருக்கட்டும்!" என்றான் கண்ணுச்சாமி.

★

கண்ணுச்சாமியின் குடும்பத்தில் ஒரு நாள் காட்சி இது. ஒருநாள் என்ன, ஒவ்வொரு நாளும் இதே காட்சிதான். அவனுக்குப் பஞ்சாலை ஒன்றில் வேலை. மாதந்தோறும் அவனுக்கு ஏறக்குறைய நாற்பது ரூபாய் கிடைத்து வந்தது — பஞ்சப் படியையும் சேர்த்துத்தான்! — இந்த வரும்படியில்தான் அந்த நாலு ஜீவன்களும் காலத்தைக் கழிக்க வேண்டும்.

'வரவுக்குத் தகுந்த செலவு செய்யவேண்டும்' என்பதில், அவனுடன் அவனைச் சேர்ந்த மூன்று ஜீவன்களும் ஒத்துழைத்தன. ஆனால், ஒத்துழைக்காத ஒன்றும் அவர்களிடையே இருக்கத்தான் செய்தது. அது வேறு எதுவுமில்லை; அவரவர்களுடைய வயிறுதான். பார்க்கப் போனால் அந்த வயிறுகளின் மீதும் குற்றம் சொல்வதற்கில்லை. ஏனெனில், ஆண்டவன்தான் ஏழை-பணக்காரன் என்ற வித்தியாசமின்றி அந்த வயிறுகளைத் தினந்தோறும் நாலு வேளைகளிலும் பசிக்கு ஆளாக்கினான்! கடவுளையும் மீறி அவற்றைக் கண்ணுச்சாமியால் ஒருவேளை ஏமாற்ற முடிந்தது; சில நாட்கள் இரண்டு வேளைகள்கூட ஏமாற்ற முடிந்தது. ஆனால், ஒரு நாளாவது நாலு வேளைகளிலும் ஏமாற்ற முடியவில்லை!

இதனால் அவன் மாதா மாதம் தன் வரும்படிக்கு மேலே, வேறு யாரிடமாவது ஐந்து, பத்து என்று கடன் வாங்க நேர்ந்தது — வட்டிக்குத்தான்! இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால், அவனால் கடன் வாங்கத்தான் முடிந்ததே தவிர, திருப்பிக் கொடுக்க முடியவில்லை. அப்படியே கொடுத்தாலும் அதைத் திருப்பி வாங்காமலிருக்க முடியவில்லை!

இப்படியே ஆளுக்குக் கொஞ்சமாக வாங்கிய கடன், நாளடைவில் முப்பது ரூபாய்க்கு மேல் ஆகிவிட்டது. அதாவது, கிட்டத்தட்ட அவனுடைய ஒரு மாதச் சம்பளத்துக்குச் சேர்ந்து விட்டது! வாங்கிய சம்பளத்தைக் கடன்காரர்களிடம் கொடுத்துவிட்டு அவன் வெறுமனே வீட்டுக்கு வர முடியுமா? ஆகவே, அவன் ஒரு யுக்தி செய்தான். தன்னுடைய நண்பன் ஒருவன் உதவியால் ஒரு காபூலிவாலாவைப் பிடித்தான். அவனிடம் ரூபாய்க்கு இரண்டணா வட்டி விகிதத்துக்கு நாற்பது ரூபாய் மொத்தமாகக் கடன் வாங்கினான். காபூலிவாலா ஐந்து ரூபாய் வட்டிக்கு எடுத்துக் கொண்டு முப்பத்தைந்து ரூபாயைக் கண்ணுச்சாமியிடம் கொடுத்தான். இதனால் அவனுடைய கவலையும் ஒருவாறு தீர்ந்தது. மாதா மாதம் சம்பளத்தை வாங்கி அப்படியே காபூலிவாலாவிடம் கொடுத்து விடுவான். அவன் அதைப் பழைய கடனுக்கு வரவு வைத்துக் கொண்டு, புதுக் கடனாக மீண்டும் நாற்பது ரூபாய் கொடுப்பான்—வட்டிக்காக ஐந்து ரூபாயை எடுத்துக் கொண்டுதான்!—இந்த ரீதியில் கண்ணுச்சாமியின் காலம் கழிந்து வந்தது.



மத்தியில் எதாவது 'போன'ஸாகக் கிடைக்கும்போது, கண்ணுச்சாமி அந்தக் கடனைத் தீர்த்துத் தலை முழுகிவிட வேண்டும் என்று நினைப்பான். ஆனால், மனிதன் நினைப்பதுபோல்தான் எனோ தெய்வம் நினைப்பதில்லையே!—அதற்கென்று வேறு வகைகளில் எதாவது செலவோ, கடனோ காத்துக்கொண்டிருக்கும். அவை 'போனஸ்' தொகையைச் சந்தடி செய்யாமல் விழுங்கிவிட்டு அப்பால் போய்விடும். அந்த நாற்பது ரூபாய் கடன் மட்டும் என்றும் சிரஞ்சீவியாக—இறவா வரம் பெற்றதாக—காபூலிவாலாவுக்கு மாதம் ஐந்து ரூபாய் லாபத்தையும், கண்ணுச்சாமிக்கு மாதம் ஐந்து ரூபாய் நஷ்டத்தையும் கொடுத்துக் கொண்டு ஆடாமல் அசையாமல் உட்கார்ந்திருக்கும். இது கதையல்ல; கற்பனையல்ல; கண்ணுச்சாமியின் சொந்த அனுபவம்!

★

அன்று பத்தாம் தேதி; சனிக்கிழமை; சம்பள தினம். காலையில் கண்ணுச்சாமி வேலைக்குக் கிளம்பும்போது, "மத்தியானம் சாப்பிட வீட்டுக்கு வாரீங்க! அங்கேயே எதாச்சும் வாங்கித் தின்னுட்டு வேலையைப் பாருங்கோ!" என்றாள் முனியம்மாள்.



"என் ?"

"அந்தச் சோள மா கூட நேத்தோடே தீர்ந்து போச்சு! சாயந்திரம் சம்பளம் வந்து நாளைக்குப் போய் ரேசன் அரிசி வாங்கிக்கிட்டு வந்தாத்தான் அடுப்பு புகையும்!"

"உம்......இங்கே இப்படி யிருக்குது. அங்கே என்னடான்னா, அந்தப் பயலுங்கெல்லாம் சேர்த்துக் கூடி இன்னைக்குச் சம்பளத்தை வாங்கிக்கிறதன்னும், நாளையிலேருந்து 'ஸ்டிரைக்' செஞ்சிப்பிடறதுன்னும் தீர்மானம் பண்ணிப்பிட்டானுங்க!"

"நீங்க என்னத்துக்கு அந்த 'ஸ்டிரைக்'கைப் பத்தியே சும்மா பேசிக்கிட்டு இருக்கீங்க? நாலு பேருக்கு ஆகிறது நமக்கும்!"

"சரி, நான் போயிட்டு வரேன்!"

"வரும்போது உங்க அப்பாவுக்கும் குழந்தைக்கும் எதாச்சும் தின்ன வாங்கிக்கிட்டு வாங்க!" என்றாள் முனியம்மாள்.

"ஆகட்டும்!" என்று கிளம்பி விட்டான் கண்ணுச்சாமி.

★

அன்று மாலை கண்ணுச்சாமியின் தலையில் எதிர்பாராத விதமாக ஒரு பேரிடி விழுந்தது! அவனிட மிருந்து வழக்கம் போல் பழைய கடனை வாங்கிக் கொண்ட காபூலிவாலா, புதுக் கடன் கொடுக்க மறுத்து விட்டான்! காரணம் என்னவென்று கேட்டதற்கு "நீங்க எல்லாம் நாளைக்குவேலைக்குப் போகாம 'ஸ்டிரைக்'பண்



ணைப் பொறுக்க இல்லே, நான் இன்னைக்கே உங்களுக்குக் கடன் கொடுக்காம 'ஸ்டிரைக்' பண்ணிப்பிட்டேன்!" என்று அவன் சிரித்துக் கொண்டே பதில் சொல்லி விட்டான்.

கண்ணுச்சாமிக்கோ சிரிக்கவும் தோன்றவில்லை; அழவும் தோன்றவில்லை!

எவ்வித உணர்ச்சியுமின்றி அவன் அடிமேல் அடி எடுத்து வைத்து வெளியே வந்தான்.

ஒருகணம் நாலா திசைகளிலிருந்தும் இடியோசை கிளம்பிக் காதுகளைத் தாக்குவது போலவும், பூமி பிளந்து கால்கள் கீழே நழுவிச் செல்வது போலவும் அவனுக்குத் தோன்றியது.

அவ்வளவுதான்; அப்படியே உட்கார்ந்து விட்டான்.

"...சாயந்திரம் சம்பளம் வந்து நாளைக்குப் போய் ரோன் அரிசி வாங்கிக்கிட்டு வந்தாத்தான் அடுப்பு புகையும்!"

"வரும்போது உங்க அப்பாவுக்கும் குழந்தைக்கும் ஏதாவது தின்ன வாங்கிக்கிட்டு வாங்க!"

இவற்றை நினைத்ததும் கண்ணுச்சாமிக்குச் சிரிப்பு வந்தது. சிரித்துக் கொண்டே எழுந்தான்; எழுந்து நடந்தான்; எங்கும் நிற்கவில்லை; நடந்துகொண்டே யிருந்தான்.

ஓர் ஒற்றையடிப் பாதை — அது கடக்குமிடத்தில் ஒரு சின்ன தெரு, அடுத்தாற்போல் ஒரு பெரிய வீதி, அதற்கும் அப்பால் ஒரு விசாலமான சாலை — அந்தச் சாலையின் கோடியே தெரியவில்லை — அதையும் கணப்பொழுதில் கடந்து விட்டான் அவன். ஆயினும் அவன் நிற்கவில்லை!

எங்குதான் போகிறானோ?

"என்ன கண்ணுச்சாமி! எங்கேயப்பா போகிறாய்?" என்று அவனை வழிமறித்துக் கேட்டான் ஒரு சுகாதாரத் தொழிலாளி.

அவனை மேலும் கீழுமாகப் பார்த்துத் திருதிருவென்று விழித்துக் கொண்டே, "வேறே எங்கே? வீட்டுக்குத்தான்!" என்றான் கண்ணுச்சாமி.

"ஹிஹ்ஹிஹ்ஹி! உன் வீடு எங்கே போச்சு, இங்கே வந்து நிக்கிறியே, அப்பா!"

"ஓஹோ! என் வீட்டுக்கு வழி அப்படியில்லே போவுது!" என்று சொல்லிக் கொண்டே கண்ணுச்சாமி திரும்பினான்.

"எப்படிப் போவுது! — இப்படிப் போறதை விட்டுட்டு அப்படியில்லே போறே? தண்ணி கின்னி போட்டுக்கிட்டு இருக்கியா, என்னப்பா? சரி சரி, எப்படியாச்சும் தொலைந்து போ!" என்று சொல்லி விட்டு, அந்தச் சுகாதாரத் தொழிலாளி தன்னுடைய நடையைத் தொடர்ந்தான்.

கண்ணுச்சாமியோ தன் பாட்டுக்குப் போய்க்கொண்டே யிருந்தான் — வேறு திசையை நோக்கித்தான்!

வழியில் ஒரு சிறுவன் இராப் பள்ளியிலிருந்து வந்து கொண்டிருந்தான். அவன் கையில் நோட்டுப் புத்தகத்தையும் பென்சிலையும் கண்டதும் கண்ணுச்சாமிக்குத் திடீரென்று ஒரு யோசனை தோன்றியது. அவனிடமிருந்த நோட்டுப் புத்தகத்தை வாங்கி அதில் ஏதோ எழுதினான். பிறகு, தான் எழுதிய பக்கத்தை மட்டும் கிழித்து எடுத்துத் தன் சட்டைப் பைக்குள் திணித்துக் கொண்டு மேலே நடந்தான்.

இப்பொழுது அவனுடைய மூளை தீவிரமாக வேலை செய்தது. அதன் பயனாகத்தானோ என்னவோ, நாற்சந்தியொன்றைக் கண்டதும் அவனுடைய நடை சிறிது தளர்ந்தது. சிறிது நேரத்திற்கெல்லாம் அவன் நின்றே விட்டான்!

நின்றபடி யோசித்தான், யோசித்தான், யோசித்தான் — அப்படி யோசித்தான்.

பிறகு, தனக்குத் தெரிந்தவர்களிடமெல்லாம் சென்று தன்னுடைய நிலைமையைச் சொல்லி, "இந்தச் சமயத்தில் எனக்கு உங்களால் ஏதாவது உதவி செய்ய முடியுமா?" என்று கல்லுங் கரைந்துருகுமாறு கேட்டான்.

காலையிலிருந்து 'ஸ்டிரைக்' அல்லவா? அந்த 'ஸ்டிரைக்'கில் தோல்வி தொழிலாளருக்குத்தான் என்பதும் தெரிந்த விஷயமல்லவா? ஆகவே, எல்லோரும் ஏகோபித்துக் கையை விரித்து விட்டனர்!

நடைபாதை ஒன்றுதான் அவனுக்கு வஞ்சனையில்லாமல் வழி விட்டுக் கொண்டே யிருந்தது!

மீண்டும் நடந்தான்!

ஒரு குளம் குறுக்கிட்டது; அவன் முகம் மலர்ந்தது!

சட்டையைக் கழற்றிக் கரையில் வைத்தான். நல்ல வேளையாகத் தான் அன்றுவரை நீந்தக் கற்றுக் கொள்ளவில்லை என்பதை நினைத்துச் சந்தோஷப்பட்டான்.

அடுத்த நிமிஷம் 'தொபுகடீர்' என்று ஒரு சத்தம்; அவன் குளத்தில் விழுந்தே விட்டான்!

"யார் அது?"

"மணி பத்துக்கு மேலாகிறதே! இந் நேரத்தில் குளத்தில் குதிப்பானேன்?"

இது அவ்வழியே வந்து கொண்டிருந்த போலீஸாரின் பேச்சு!

இருவரும் உடனே குளக்கரையை நெருங்கினர்; திக்குமுக்காடும் கண்ணுச் சாமியைக் கண்டனர்; கரையும் சேர்த்தனர்!

கண்ணுச்சாமி வாழ்க்கையை வெறுத்தான்; ஆனால் வாழ்க்கை அவனை வெறுக்கவில்லை!

"என்னப்பா, யாரையாவது வேலை தீர்த்துப்பிட்டு வந்து குளத்தில் விழுந்து விட்டாயா, என்ன?"

"கையிலே ஏதாச்சும் கத்தி கித்தி இருக்குதான்னு பார், அண்ணே!"

"கையிலே ஒண்ணுமில்லே! சட்டையைத்தான் இங்கே கழற்றி வைத்திருக்கிறான்!"

"அதை எடு, பார்ப்போம்!"

"இதோ பார். அப்பா!"

"என்ன, அது?"

"கடிதாசி!"

"அந்த 'டார்ச்'சை இந்தப் பக்கமா கொஞ்சம் காட்டு!"

"போலிஸ் ஜவான்களுக்கு,

என்னை யாரும் குளத்தில் தள்ளவில்லை; நானேதான் என்னைத் தள்ளிக் கொண்டேன். காரணம் என்னவென்று தெரிந்து, நீங்கள் இனிமேல் செய்யப் போவது ஒன்றுமில்லை. இந்தக் கடிதம் எதற்காக வென்றால், நீங்கள் அனாவசியமாத் துப்பு விசாரித்து அவதிப்பட வேண்டாம் என்பதற்கே!

—கண்ணுச்சாமி."

"ஐயே! இவரு தற்கொலையில்லே பண்ணிக்க வந்திருக்காரு!"

"சரி சரி, ஸ்டேசனுக்கு இழுத்துக் கிட்டுப் போவோம்!"

இது போலீஸாரின் முடிவு.

★

அடுத்த சில தினங்களுக்கெல்லாம் கண்ணுச்சாமியின் தற்கொலை வழக்கு நீதி மன்றத்தில் வழக்கம்போல் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது.

கண்ணுச்சாமியிடம் அனுதாபம் கொண்ட தோழர்களில் சிலர், ஆளுக்குக் கொஞ்சம் பணம் கொடுத்து, அவனுக்கென்று ஒரு வக்கீலை நியமித்தனர்.

அந்த வக்கீல் தன் கட்சிக்காரன் தற்கொலை செய்து கொள்வதற்காகக் குளத்தில் குதிக்கவில்லை என்பதற்கு என்னென்ன ஆதாரங்கள் தேட முடியுமோ, அத்தனை ஆதாரங்களையும் தேடி எடுத்துக் காட்டி வாதித்தார்.

சர்க்கார் தரப்பு வக்கீலோ, கண்ணுச்சாமி தற்கொலை செய்து கொள்வதற்காகத் தான் குளத்தில் குதித்தான் என்பதற்கு என்னென்ன ஆதாரங்கள் தேட முடியுமோ, அத்தனை ஆதாரங்களையும் தேடி எடுத்துக் காட்டி வாதித்தார்.

கடைசியில், சர்க்கார் தரப்பு வக்கீலின் கட்சிதான் ஜயித்தது!

நீதிபதி தமது தீர்ப்பை வாசித்தார்— கண்ணுச்சாமிக்கு ஏழு வருஷச் சிறைத் தண்டனை என்று!

இதைக் கேட்டதும் கண்ணுச்சாமி 'இடி இடி' யென்று சிரித்துக் கொண்டே சொன்னான்:

"நல்ல வேடிக்கை ஐயா, இது! எனக்கு வைச்ச வக்கீல் என்னடான்னா, நான் தற்கொலை பண்ணிக்கிறதுக்காகக் குளத்திலே விழலே என்கிறதை நிரூபிக்கிறதற்காகவே இத்தனை நேரமும் கரடியாய்க் கத்தினாரு; சர்க்கார் கட்சி வக்கீல் என்னடான்னா, நான் தற்கொலை பண்ணிக்கிறதுக்காகத்தான் குளத்திலே விழுந்தேன் என்கிறதை நிரூபிக்கிறதற்காகவே இத்தனை நேரமும் படாத பாடு பட்டாரு. ஆனா, 'நான் என்னத்துக்காகத் தற்கொலை பண்ணிக்கப் போனேன்?' என்கிறதைப் பற்றி மட்டும் யாருமே விசாரிக்கலையே!—இல்லே, நான் கேட்கிறேன் — இந்தக் கோர்ட்டுங்க எல்லாமே குற்றத்தை மட்டுந்தான் விசாரிக்குமா? குற்றத்துக்குக் காரணம் என்னன்னு விசாரிக்கவே விசாரிக்காதா?"



அதற்குமேல் கோர்ட் சேவகன் சும்மாயிருக்கவில்லை; "உஸ் ஸைலன்ஸ்!" என்று உரத்துக் கூவினான்.

## ஏஜண்டுகள் தேவை

இரண்டு லட்ச ரூபாய் மூலதன அடிப்படையில்

# சுதந்தரத் தமிழன்

(அரசியல் தமிழ் செய்தி வாரப் பத்திரிகை)

[நிர்வாக ஆசிரியர் :—திருச்சி "எதிரொலி" மு. கணபதி]

தமிழ்ப் பத்திரிகை உலகம் பிரமிக்கத்தக்க முறையிலே, புதியதொரு பாதையில், சாதி, மத, கட்சி வேறுபாடின்றி, மதுரையிலிருந்து 15—2—48 அன்று வெளி வருகின்றது.

தனிப் பிரதி 0-2-0; வருட சந்தா ரூ. 6-0-0

விற்பனை ஏஜண்டுகளும் நிருபர்களும் எங்கும் தேவை

•

இதர விவரங்களுக்கு :—மானேஜர் : "சுதந்தரத் தமிழன்"

69, தெற்கு வெளி வீதி, மதுரை

---

நந்தேச சீதோஷ்ண ஸ்திதிக்கேற்க செய்யப்பட்ட

# பில்கோ ரேடியோ




அழகிய ப்ளாஸ்டிக் பெட்டி

சாதாரண கிராமபோன் விலையில்

இப்போது உங்களுக்குக் கிடைக்கும்.

ரூ. 385

உங்களுக்கு இஷ்டமான ஸ்டேஷன்களைக் கேட்கலாம்

விவரங்களுக்கு எழுதுங்கள்; சென்னை மாகாண, சமஸ்தான விநியோகஸ்தர்கள்

## மகமத் இப்ராஹிம் அண்ட் கோ

"விஜய மாளிகை" 7-8, மவுண்ட் ரோடு, மதராஸ்-2

# கம்பர் தரும் காட்சி

## 201. என்ன பரிதாப நிலை!

டி.கே.சி.

புதரிலிருந்து ஒரு அம்பு வந்து வாலியின் மார்பில் தைத்தது. அந்த அம்பை அப்படியே உருவி அதில் யார் யார் பெயர் பொறித்திருக்கிறது என்று உற்றுப் பார்த்தான்.

எழுதி யிருந்த எழுத்து என்ன என்று பார்க்கலாம்:

* * *

உயர்ந்த லக்ஷியமுள்ள மகான் ஒருவர் இருந்தார். அவரால் உலகத்தாருக்கு எத்தனையோ விதத்தில் நன்மை உண்டாயிற்று. ஆயிரக்கணக்கான வருஷங்களாகத் தொடர்ந்து மனித வாழ்க்கையைப் புனிதப்படுத்தி வந்தது அந்த மகானுடைய நினைவு. இது நாம் சரித்திரத்தில் கண்டறியும் உண்மை. இனி:

ராமன் என்றால் உயர்ந்த லக்ஷியத்தில் நிற்பவன். கடவுள் தத்துவத்தில் இணைப்பவன். அது காரணமாகத் தியாகம் என்பதும் சாமான்ய காரியமாய்ப் போய்விடுகிறது.

தியாகத்தைத் தியானித்தாலே ஆணவம், பிறவியினால் உண்டாகும் மயக்கம் எல்லாம் எளிதில் நம்மை விட்டுக் கழன்று போய் விடுகின்றன. ஆனந்த மயமான பரம்பொருளோடும் கலந்து விடலாம்.

எல்லாம் ராமனது லக்ஷியத்தையும் வாழ்க்கையையும் மனசில் பதித்த மாத்திரத்தில் சாத்தியமாகிற காரியம். இந்த உண்மையைக் கவிஞர் தமது அபூர்வமான பாஷையில் வெளியிடுகிறார்.

மும்மைசால் உலகுக்கெல் லாம்
  மூலமந் திரத்தை,முற் றும்
தம்மையே தமர்க்கும்நல் கும்
  தனிப்பெரும் பதத்தை,மா யத்(து)
இம்மையே எழுமைநோய்க் கும்
  மருந்தினை, இராமன்என் னும்
செம்மைசேர் நாமம்தன் னைக்,
  கண்களில்த் தெரியக்கண் டான்.

[மும்மை சால் உலகுக்கு எல்லாம்: வானம், பூமி, பாதாளம் என்று உலகங்களை விசாலமாக வகுத்து — அவைகளில் பலதிறப்பட்ட மக்கள் வாழ்வநாகவும் வைத்துக் கொண்டால், அவர்கள் எல்லாருக்குமே கடவுளைப் பற்றிய ஞானத்தைக் கொடுப்பதாகும், ராமன் என்ற மந்திரம்; மூலமந்திரம்: அடிப்படையான உண்மைகளை விளக்கி விடும் ராமனது தியானம்; முற்றும் தம்மையே தமர்க்கு நல்கும் தனிப் பெரும் பதத்தை: ராமன் என்று நினைத்த மாத்திரத்திலேயே, எங்கும் நிறைந்த ஆனந்தமயமான கடவுள் நிலைதான் ஞாபகத்துக்கு வரும். அந்தப் பதவியை முழுவதுமே நமக்கு அளிக்கவல்லது ராம நாமம். தனிப் பெரும் பதத்தை: ஏகமாய் எங்குமாய் ஆனந்தமாய் நிறைந்துள்ள மோக்ஷ நிலையையே 'ராமன்' என்று உபாசித்து இருக்கிறது; மாயத்து இம்மையே எழுமை நோய்க்கும் மருந்தினை: இந்த ஒரு பிறவியில் ஏற்படும் ஆணவச் செயலினால், நாம் ஒரே மயக்கத்தில் இருக்கிறோம்; முன்னுள்ள ஏழு பிறவிகளில் ஏற்பட்டுள்ள ஆணவச் செயல்களுக்கு எவ்வளவு அழுத்தம் ஏற்பட்டிருக்கும்,—அவ்வளவையும் சேர்ந்தால் இந்தப் பிறப்பில் ஏற்படும் மயக்கம் எவ்வளவு திண்மையாக இருக்கும். அவ்வளவு மயக்கத்தையும் நீக்கக்கூடிய மருந்தாக இருக்கிறது ராம நாமம்; செம்மை சேர் நாமந் தன்னை: புனிதமாகவுள்ள நாமத்தை; கண்களில் தெரியக் கண்டான்: தனக்குக் காணக் கிடைக்காத அந்த அரிய நாமத்தை நேர்முகமாகக் கண்டு கொண்டான் வாலி— ராமனை அவ்வளவாக மதித்திருந்தான் வாலி என்பது நமக்குத் தெரியும்.

குறிப்பு:—ராமன் என்ற திருநாமம் வாலிக்கு அபூர்வமான உணர்ச்சியை உண்டாக்கி விட்டது. கவிஞருக்குமே உண்டாக்கி விட்டது. அப்படி உண்டான உணர்ச்சியிலிருந்து அபூர்வமான பாவ உருவத்தோடு செய்யுள் பிறந்து விட்டது. பக்தி பாவம், தெள்ளத் தெளிந்து நிற்கிறது கவியில்.]

வீட்டிலிருந்து புறப்படும்போது, வாலியின் மனைவி "உன் தம்பிக்கு ராமன் என்று ஒருவன் துணையாக வந்திருக்கிறான். நீ வெளியே போக வேண்டாம்" என்று சொன்னாள். வாலியோ, "நீ சுத்தப் பைத்தியக்காரி! ராமன் என்றால் தியாகமூர்த்தி அல்லவா? கடவுள் அம்சம் என்றல்லவா சொல்ல வேண்டும்! இந்த அயோக்கியன் சுக்கிரீவனுக்குத் துணையாகவா வருவான் ராமன்?" என்று வாலி சொன்னான்.

அம்பில் எழுதியிருந்த ராம நாமத்தைப் பார்த்தவுடன், வீட்டில் நடந்த சம்பாஷணை ஞாபகத்தில் வந்துவிட்டது வாலிக்கு. எப்படியிருக்கும் அவனுக்கு! ஒரே ஏமாற்றம்!

இப்படியும் உண்டா! அரண்மனை வாழ்க்கையை யெல்லாம் துறந்து விட்டு, வனவாசம் செய்ய வந்த ராமன் இப்போது என்ன செய்திருக்கிறான்! சாமான்யக் குரங்குகளுக்காக, தன் குலத்துக்கு உரிய உயர்ந்த போர் முறையைக் கைவிட்டுவிட்டு மறைவிலிருந் தல்லவா அம்பை எய்திருக்கிறான். என்ன வெட்கக் கேடு!

இல்லறம் துறந்தநம் பி
எம்மனோர்க் காகத்தங் கள்
வில்லறம் துறந்துநின் றான்
என்றலால், வேதநன் னூல்ச்
சொல்லறம் துறந்திலா த
சூரியன் மரபுந்தொல் லை
நல்லறம் துறந்த(து)என் று
நகைவர நாண்உட்கொண் டான்.

[இல்லறம் துறந்த நம்பி: இல்லற வாழ்க்கையை விட்டு வனவாசத்தை மேற்கொண்ட மகான்; எம்மனோர்க்காக: எம் இனத்தாராகிய குரங்குகளுக்காக; தங்கள் வில்லறம் துறந்து நின்றான் என்றால்: தன் குலத்தாருக்கு உரிய க்ஷத்திரிய தர்மத்துக்கு மாறான செய்கையைச் செய்திருக்கிறான் என்பது இப்போது தெளிவாய் விட்டதால்; வேத நன்னூல் சொல்லறம் துறந்திலாத சூரியன் மரபும்: அடிப்படையான நீதிகளை எடுத்துச் சொல்லும் நூல்களில் கண்ட நீதிகளினின்று சிறிதும் வழுவாத சூரிய குலமே (ராமனது குலம்); தொல்லை நல்லறம் துறந்தது என்று: தனக்குப் பூர்வமாக ஏற்பட்ட முறையை ஒழிந்து விட்டது என்று சொல்லி; நகை வர நாண் உட்கொண்டான்: முகத்தில் சிரிப்பு வந்தது. அடுத்த நிமிஷத்தில் உள்ளத்தில் நாணம் ஏற்பட்டது;— காரணம், வாலி தன் குலத்துக்கு ஏற்பட்ட உயர்ந்த லக்ஷியத்தில் நிற்பவன். அதனால் ராமனையும் தன் குலத்துக்கு ஏற்ற லக்ஷியத்தில் நிற்பான் என்று எதிர்பார்த்தான். அவன் சறுக்கி விழுந்தது வாலிக்கே அவமானமாக இருக்கிறது—நாண் உட்கொண்டான்!]

* * *

ராமனது செயல் வாலியையே வெட்கப்படும்படி செய்து விட்டது. அந்த வெட்கத்திலிருந்து பல உணர்ச்சிகள் எப்படி யெல்லாமோ பிறக்கின்றன.

வெள்கிடும், மகுடஞ்சாய்க் கும்,
வெடிபடச் சிரிக்கும்,மீட் டும்
உள்கிடும், இதுவும்தான் ஓர்
ஓங்கற மோஎன்(று)உன் னும்;—
முள்கிடும் குழியிற்புக் க
மூரிவெங் களிநல்யா னை
தொள்கொடுங் கிடந்ததென் னத்
துயர்உழந்(து) அழிந்துசோ ரும்.

[வெள்கிடும் மகுடஞ் சாய்க்கும்: வெட்கமுற்றவனாய், தலையைச் சாய்த்துச் சிறிது நேரம் அசைவற்று இருக்கிறான்; பிறகு வெடிபடச் சிரிக்கும்: ஹஹ்ஹஹா என்று பெருஞ் சிரிப்புச் சிரிக்கிறான்; மீட்டும் உள்கிடும்: சிரிப்பு அப்படியே நின்றுபோய் மறு விநாடியில் ஒரே யோசனையில் ஆழ்ந்து விடுகிறான்; இதுவும்தான் ஓர் ஓங்கு அறமோ என்று உன்னும்: பேஷ்! இதுவும் ஒரு பெரிய தர்மமோ என்று கசந்த உள்ளத்தோடு எண்ணுகிறான்; முள்கிடும் குழியிற் புக்க: சறுக்கி விழுவதற்காகத் தோண்டிய கொப்பத்தில் விழுந்து அகப்பட்ட; மூரி வெங்களி நல்யானை: அபாரமான வலிமையோடு மத வெறியும் கொண்ட யானை; தொள் கொடுங் கிடந்தது: குழியில் போட்டிருந்த வலைக் கயிறுகளில் சிக்குண்டு கிடந்ததுபோல்; தொள்கு: வலை; துயர் உழந்து அழிந்து சோர்வான்: துயரத்துக்கு உள்ளாய் வேறு புகல் இல்லாமல் மனம் இடிந்து சோர்வான்.]

அதர்மம் எதிர்பாராத இடத்திலிருந்து வரும்போது உடலையும் உள்ளத்தையும் நிலை கலங்கச் செய்து விடுகிறது. வாலியின் நிலை என்ன பரிதாப நிலை!

# தோல்வியில் வெற்றி

**அக்ஷயம்**

தாய்க்குத் தன் தனயனைக் காணும் பொழுது, வியாபாரிக்குத் தன் வாடிக்கைக்காரனைக் காணும்பொழுது, குடியானவனுக்குக் 'கொழு கொழு' என்று வளர்ந்திருக்கும் தன் பயிரைக் காணும்பொழுது மட்டற்ற மகிழ்ச்சி ஏற்படும் அல்லவா? அதேபோலத் தாடிச் சாமியாருக்குத் தம் குதிரையைக் காணும்போது ஒரே மகிழ்ச்சி தான்! பகவான் நாமாவை ஜபித்த பிறகு மிகுந்திருக்கும் நேரத்தை அவர் தம் குதிரையைக் கண்ணும் கருத்துமாகக் காக்கும் விஷயத்தில் அர்ப்பணம் செய்து வந்தார்.

அவருடைய குதிரை மிகவும் அழகு வாய்ந்தது. அதற்கிணையான குதிரை அந்தப் பிராந்தியத்திலேயே வேறில்லை. தாடிச் சாமியார் அதற்கு 'நித்திய கல்யாணி' என்று பெயர் வைத்திருந்தார். அவரோ அனைத்தும் துறந்த துறவி. ஆனால் நித்திய கல்யாணியைப் பிரிந்திருக்க மட்டும் அவருக்குச் சிறிதும் மனம் வருவதில்லை. 'அதைத் துறந்து உயிர் வாழ்வது முடியாத காரியம்' என்றுகூட அவருக்குப் பட்டது. அவர் அதன் நடையழகிலே லயித்து, 'கார்முகிலைக் கண்டு ஆடும் மயிலைப்போல் அல்லவா நடை போடுகிறது!' என்று வெகு பெருமையாகச் சொல்லிக் கொள்ளுவார்.

கிராமத்து மக்கள் அவர் தம் குதிரை மீது வைத்திருந்த அளவற்ற அன்பைக் கண்டு அதிசயித்தனர்; சிலர் 'இவர்தான் எல்லாம் துறந்த துறவியாம்!' என்று கூட ஏளனம் செய்தனர். தாடிச் சாமியார் அவர்கள் சொல்வதை லட்சியமே செய்வதில்லை. மாலை வேளைகளில் நித்திய கல்யாணியின் மீதேறி, நான்கைந்து மைல் தூரமாவது சவாரி செய்யாவிட்டால், அவருக்கு நாள் போனதாகவே தெரியாது.

கொள்ளைக்காரக் குமாரலிங்கம் என்ற பெயரைக் கேட்டாலே அந்தப் பிராந்தியத்திலுள்ள அனைவருக்கும் குலை நடுக்கம் எடுக்க ஆரம்பித்துவிடும். நித்திய கல்யாணியின் புகழ் அவனுடைய காதுகளுக்கும் எட்டியது. அவனுக்கு அதை ஒரு முறையாவது பார்க்க வேண்டும் என்று ஆவல். அந்த ஆவலை அடக்க மாட்டாமல் அவன் ஒருநாள் தாடிச் சாமியாரின் இருப்பிடத்துக்கே வந்து அவரை வணங்கினான்.

தாடிச் சாமியார் மிகவும் மரியாதையான குரலில், "என்ன சேதி, குமாரலிங்கம்? சௌக்கியமா?" என்று விசாரித்தார்.

குமாரலிங்கம் குனிந்த தலை நிமிராமல், "உங்கள் புண்ணியத்திலே சௌக்கியந்தானுங்க!" என்றான்.

"ஏதாவது விசேஷம் உண்டா? ஒரு விசேஷமும் இல்லாமல் நீ எங்கேயும் வெளியில் புறப்பட மாட்டாயே!"

"உங்கள் நித்திய கல்யாணியைப் பார்த்துவிட்டுப் போகலாம் என்றுதான் வந்தேனுங்க."

"அப்படியா! ரொம்ப நல்ல குதிரை, அப்பா! அதன் அழகை என்னவென்று சொல்லுவது? நீ பார்த்தால் சொக்கிப் போய்விடுவாய்! அவ்வளவு அழகான குதிரை அது!"

"அதைப் பற்றி ஜனங்கள் ரொம்பப் பேசிக் கொள்ளுகிறார்கள். அதனால் தான்......"

"அதன் நடை ஒன்றே போதும், அப்பா! நீ பார்த்தால் மனதைப் பறிகொடுத்து விடுவாய்! நான் துளிக்கூட அதிகப்படுத்திச் சொல்லவில்லை."

"பார்ப்பதற்கு ரொம்ப அழகாயிருக்குமாமே?"

"என்னத்தைச் சொல்லுவது, போ! ஒரு தடவை பார்த்து விட்டால் போதும், அதன் உருவம் உன் கண்களில் அப்படியே நிற்கும்!"

"ரொம்ப நாட்களாகப் பார்க்க வேண்டும் என்று ஆசை. ஆனால் இன்றுதான் வர முடிந்தது" என்றான் குமாரலிங்கம்.

சிறிது நேரத்துக்கெல்லாம் குமாரலிங்கமும் சாமியாரும் லாயத்துக்குச் சென்றனர். சாமியார் வெகு செருக்குடன் தம் குதிரையைக் குமாரலிங்கத்துக்குக் காண்பித்தார். குமாரலிங்கம் வைத்த கண் வாங்காமல் சிறிது நேரம் அதையே பார்த்துக்கொண்டு நின்றான். பிறகு, 'நம்மிடம் இருக்க வேண்டிய குதிரை இந்தச் சாமியாரிடம் அல்லவா இருக்கிறது!' என்று எண்ணியவண்ணம் அந்த இடத்தை விட்டு அகன்றான்.

2

ஒரு நாள் அந்திப் பொழுதில் சாமியார் வழக்கம்போல் நித்திய கல்யாணியின் மீதேறி உலாவப் போய்க் கொண்டிருந்தார். அச்சமயம் வழியில் எங்கிருந்தோ, "அப்பா! இந்த ஏழைக்கு ஒரு ஒத்தாசை செய் அப்பா!" என்று ஒரு ஈனக் குரல் வந்தது. சாமியார் அந்தக் குரல் வந்த திசையை நோக்கித் தம் குதிரையைத் திருப்பினார். ஒரு மரத்தின் அடியில் நொண்டி ஒருவன் படுத்து முனகிக்கொண்டிருந்தான். அவனை நோக்கி, "உனக்கு என்ன அப்பா செய்ய வேண்டும்?" என்று சாமியார் அன்புடன் விசாரித்தார்.

நொண்டி இரு கைகளையும் கூப்பி, "சாமி, நான் ஒரு முடவனுங்க. என்மேல் இரங்கிப் பக்கத்துக் கிராமத்தில் கொண்டு போய் என்னை விட்டுவிடுங்க. உங்களுக்குக் கோடிப் புண்ணியமுண்டு. ஆண்டவன் அருள் கிடைக்கும்!" என்று வாழ்த்தினான்.

"அங்கே உனக்கு யார் இருக்கிறார்கள்?"

"அங்கே ஒரு வைத்தியர் இருக்கிறாரே, தெரியுங்களா, உங்களுக்கு! அவர் எனக்கு ஒரு முறையில் அண்ணனாக வேண்டும்!" என்றான் அந்த நொண்டி.

சாமியார் குதிரையிலிருந்து இறங்கி அந்த நொண்டியைத் தூக்கிக் குதிரைமேல் ஏற்றிக் கொண்டார். பிறகு அவர் குதிரையின் கடிவாளத்தை இழுத்துப் பிடித்து மெதுவாக ஓட்டலானார்.

திடீரென்று யாரோ ஒருவன் அவரைப் பிடித்துத் தள்ளியதுபோலிருந்தது. அடுத்த நிமிஷம் அவர் கையிலிருந்த லகான் இன்னொரு கைக்கு மாறி விட்டது. அவருக்கு ஆச்சரியம் தாங்கவில்லை. தான் தூக்கி வைத்துக்கொண்டு வந்த அதே முடவன் குதிரை மீது வெகு லாகவமாக உட்கார்ந்து கொண்டு, அதை வேகமாக விரட்டிக் கொண்டு போவதை அவர் பார்த்தார்.

சந்தேகமே யில்லை; அந்த நொண்டி கொள்ளைக்காரக் குமாரலிங்கமேதான்!

சாமியார் எழுந்து நின்று மண்ணைத் தட்டியவாறு சிறிது நேரம் மௌனமாக நின்றார். அதற்குப் பிறகு சற்று யோசித்து ஒரு முடிவுக்கு வந்தவராய், தன் பலம் கொண்ட மட்டில் இரைந்து, "சற்று நிறுத்து, அப்பா!" என்றார்.

பிறரால் தான் வஞ்சிக்கப்பட்டபோதும் ஆத்திரமடையாத அவருடைய குரலைக் கேட்டதும், குமாரலிங்கம் குதிரையை நிறுத்திவிட்டான். பிறகு அவன் அதன் கழுத்தை அன்புடன் தடவிக் கொடுத்துக் கொண்டே, "சாமி, இனிமேல் இந்தக் குதிரையை உங்களுக்குத் தரமாட்டேன்!" என்றான்.

"தரவேண்டாம், அப்பா! ஆனால் நான் சொல்லும் ஒரே ஒரு வார்த்தையை மட்டும் கேட்டுவிட்டுப் போ!" என்றார் சாமியார்.

"என்ன?" என்று கேட்டான் குமாரலிங்கம்.

"என்னுடைய வேண்டுகோள் என்னவென்றால், நீ முடவனாக வந்து என்னிடமிருந்து இந்தக் குதிரையை அபகரித்துப் போன இந்தச் சம்பவத்தை மட்டும் யாரிடமும் சொல்லக் கூடாது என்பதுதான்!"

இதைக் கேட்டதும் குமாரலிங்கம் ஆச்சரியத்தினால் வாயைப் பிளந்தான். "சாமியார் இந்த விஷயத்தை யாரிடமாவது சொல்வதற்குள், நாம் அவருடைய குதிரையை அடித்துக் கொண்டு எங்கேயாவது



ஓடியே போய்விட வேண்டும்" என்று எண்ணிக் கொண்டிருந்தால் சாமியாரோ "இந்தச் சம்பவத்தை யாரிடமும் சொல்லாதே!" என்கிறாரே, என்ன அர்த்தம்?

குமாரலிங்கத்துக்கு ஒன்றும் விளங்கவில்லை. "ஏன் சாமி, உங்களுக்கு என் அந்தப் பயம்?" என்று கேட்டான்.

"ஜனங்களுக்கு இந்தச் சம்பவம் தெரிந்து விட்டால், அவர்களுக்கு ஏழை எளியவர்களின் மேலுள்ள கருணை குறைந்து போய் விடும், அப்பா!" என்றார் சாமியார்.

இந்த வார்த்தைகளைச் சொல்லி முடித்ததும் அவர் நித்திய கல்யாணிக்கும் தமக்கும் யாதொரு விதமான சம்பந்தமும் இல்லாதவர்போல அங்கிருந்து போய்விட்டார். ஆனால் சாமியார் சொன்ன அந்த வாக்கியங்கள் மட்டும் கொள்ளைக்காரக் குமாரலிங்கத்தின் காதுகளில் ரீங்காரம் செய்த வண்ணமாயிருந்தன. 'என்ன உயர்ந்த நோக்கம்! எவ்வளவு பரிசுத்தமான எண்ணம்! தம்முடைய குதிரையைக் கொள்ளை கொடுத்து விட்டதற்காகக்கூட அவர் வருந்தவில்லை. 'ஜனங்கள் ஏழைகளை நம்பாமல் போய்விடுவார்களே!' என்றல்லவா கவலைப்படுகிறார்!

குமாரலிங்கம் சிந்தனை யலைகளை மோத விட்டு ஒரு முடிவுக்கு வந்தான்.

3

ஒரு நாள் இரவு குமாரலிங்கம் நாடிச் சாமியாரின் குடிசைக்குச் சென்றான். நாற்புறமும் அமைதி நிலவியிருந்தது. வானத்தில் நட்சத்திரங்கள் கண் சிமிட்டிக்கொண்டிருந்தன. சற்றுத் தொலைவில் கிராமத்து நாய்கள் குரைத்துக் கொண்டிருந்தன. குடிசைக்குள்ளும் அமைதி நிலவியிருந்தது. பேச்சு மூச்சு இல்லை. குமாரலிங்கம் நித்திய கல்யாணியின் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டு சிறிது நேரம் நின்றான். பிறகு மெதுவாகக் குதிரை லாயத்தின் வாசல் வரைக்கும் சென்றான். வாசல் கதவு விரகதாபத்தினால் வாடுபவர்களின் விழிகளைப்போல விழித்தது விழித்தபடியே திறந்திருந்தது. குமாரலிங்கம் குதிரையைக் கொண்டு போய் ஒரு மூலையில் கட்டிவிட்டுத் திரும்பி வாசற் கதவை நன்றாகச் சாத்தினான். அச்சமயம் அவன் கண்களில் நீர்த் துளிகள் துளித்து நின்றன.

அந்தக் கும்மிருட்டின் மூன்றாவது ஜாமம் கழிந்து நான்காவது ஜாமம் ஆரம்பமாகி விட்டது. சாமியார் தம் குடிசையிலிருந்து வெளியே வந்து குளிர்ந்த நீரில் ஸ்நானம் செய்தார். அதற்குப் பிறகு அவர் தாமாகவே மந்திர வசப்பட்டவர்போலக் குதிரை லாயத்துக்குச் சென்றார். ஆனால் வாசலண்டை சென்றதும்தான் அவருக்குத் தம்முடைய தவறு தெரிந்தது. அது மட்டும் இல்லை; அந்தப் பெரிய ஏமாற்றமானது அவரை அப்படியே ஸ்தம்பித்து நிற்கும்படியும் செய்துவிட்டது.

குதிரை தன்னுடைய இயற்கை யறிவைக் கொண்டு, தன் எசமானரின் காலடிச் சப்தத்தை ஊகித்தறிந்து உரக்கக் கனைத்தது.

சாமியார் ஒரே பாய்ச்சலாக உள்ளே ஓடி அதன் கழுத்தை இறுகக் கட்டிக் கொண்டார். பிறகு மெதுவான, தெளிவான குரலில், "இனிமேல் எவனும் ஏழைகளுக்கு இரங்கி உதவி புரிய மறுக்க மாட்டான்" என்று சொல்லிக் கொண்டே கண்ணீர் சொரியலானார். அந்தக் காட்சியைக் கண்ட குமாரலிங்கத்தின் கண்களிலிருந்தும் நீர் வடிந்தது.

(ஹிந்திக் கதை யொன்றைத் தழுவியது.)

# விசித்திர வீடு

☆ விஜயம் ☆

"முத்து! கதை ஒன்று சொல்லுகிறேன், கேட்டுக் கொண்டே தூங்கிவிட வேண்டும்! என்ன?" என்று கேட்டாள் அம்மா.

"அதெல்லாம் முடியாது, அம்மா! கதையைக் கேட்டுவிட்டு அப்புறம் தான் தூங்குவேன்! நிஜமான கதையாகச் சொல்லு; கேட்கிறேன்" என்றான் முத்து.

"சரி, ஒரு நிஜக் கதை சொல்லுகிறேன், கேளு!" என்று சொல்லிவிட்டு அம்மா கதை சொல்ல ஆரம்பித்தாள்:—

"ஓர் ஊரில் ஐந்து சகோதரர்கள் இருந்தார்கள். அவர்களில் மூத்தவன் மிகவும் பெரியவனாயிருந்தான்; அடுத்தவன் அவனைவிடக் கொஞ்சம் சின்னவனாயிருந்தான்; அவனுக்குத் தம்பி இன்னும் கொஞ்சம் சின்னவனாயிருந்தான்; அவனுக்கு இளையவன் அவனைவிட இன்னும் சின்னவனாயிருந்தான்; கடைசித் தம்பி ரொம்ப ரொம்பச் சின்னவனாயிருந்தான்!

"இந்த ஐந்து சகோதரர்களும் எங்கே போவதாயிருந்தாலும் சேர்ந்துதான் போவார்கள்; கடைக்குப் போனாலும் சினிமாவுக்குப் போனாலும் சர்க்கஸுக்குப் போனாலும் ஓடினாலும் ஆடினாலும் அவர்கள் ஒருவரை விட்டு ஒருவர் பிரிய மாட்டார்கள்.

"ஒரு நாள் அவர்கள் வெகுதூரம் போனார்கள். போன இடத்தில் அவர்கள் ஐந்து பேரும் இருப்பதற்குப் போதுமான இடமுள்ளதாக வீடு ஒன்று கிடைத்தது. வீடு பளபளவென்று பார்ப்பதற்கு மிகவும் நன்றாயிருந்தது. அந்த வீட்டுக்குள்ளே புகுந்து பார்க்க வேண்டுமென்று அவர்களுக்கு ஆசையாயிருந்தது. வழக்கம்போல் ஐந்து பேரும் சேர்ந்தாற்போல் வீட்டுக்குள்ளே புகுந்தார்கள். அவர்கள் ஐந்து பேருக்கு மேல் ஓர் ஆளுக்குக் கூட அந்த வீட்டில் இடமில்லை. காற்று வசதி மிகவும் குறைவாயிருந்தது. அவர்களுக்கு அதிக நாழிகை அந்த வீட்டுக்குள்ளே இருக்க முடியாது என்று தோன்றியது.



"உடனே வெளியே வந்துவிடலாமென்றால் அதற்கும் முடியாமல் போய்விட்டது. அவர்கள் அந்த வீட்டுக்குள்ளே புகுந்தார்களோ இல்லையோ, அந்த வீட்டின் முன் வாசற் கதவு 'டபக்' கென்று மூடிக்கொண்டு விட்டது. வீட்டின் பின் பக்கத்து வழியாக வந்துவிடலாம் என்றால் அதுவும் முடியவில்லை. பின்புறத்தில் வாசல் இருந்தால்தானே? ஐந்து சகோதரர்களும் உள்ளே திக்குமுக்காடித் திணறிப் போய்விட்டார்கள்.

"இந்தச் சமயத்தில்தான் இன்னொரு அதிசயம் நேர்ந்தது. அந்த வீடு ஐந்து சகோதரர்களுடன் கூட நகர்ந்தது! வர வர வீடு வேகமாகப் போக ஆரம்பித்தது. ரொம்ப தூரம் சுற்றி அலைந்த பிறகு அந்த வீடு ஓர் இடத்துக்கு வந்து நின்றது. பாவம், ஐந்து சகோதரர்களும் மிகவும் களைத்துப் போய்விட்டார்கள். என்ன ஆச்சரியம்! வீட்டின் வாசற் கதவு 'டப்' என்று தானாகவே திறந்து கொண்டது. சகோதரர்கள் ஐந்து பேரும் 'கெட்டோம், பிழைத்தோம்' என்று முண்டியடித்துக் கொண்டு வெளியே வந்து விட்டார்கள்!" என்று சொல்லி அம்மா கதையை நிறுத்தினாள்.

இதுவரையில் பேசாமல் கதையைக் கேட்டுக் கொண்டிருந்த முத்து 'களுக்' என்று சிரித்து விட்டான். 'என்ன கதை அம்மா, இது? வீடாவது நகர்ந்து போகவாவது? இது நிஜக் கதை என்று சொல்லுகிறாயே! பொய்தானே?"

"இல்லை, முத்து! இது நிஜக் கதைதான். நாளைக்கு உனக்கு அந்த விசித்திர வீட்டைக் காட்டுகிறேன். அந்த ஐந்து சகோதரர்களையும் கூட நீ பார்க்கலாம். இப்

பொழுது பேசாமல் தூங்கு!" என்றாள் அம்மா.

முத்துவுக்கு ஒரே ஆச்சரியமாயிருந்தது. அம்மா சொல்லுவதை அவனால் நம்ப முடியவில்லை. இருந்தாலும் அம்மா தான் பொழுது விடிந்ததும் அந்த விசித்திர வீட்டையும், அந்த விநோதச் சகோதரர்களையும் காட்டுகிறேன் என்று சொல்லியிருக்கிறாளே! அதனால் கொஞ்சம் நிம்மதியுடன் தூங்கினான்.



மறுநாள் பொழுது விடிந்தது. முத்து அன்றைய தினம் ரொம்ப சீக்கிரம் எழுந்து விட்டான்.

"அம்மா, அந்த விசித்திர வீட்டைப் பார்க்கப் போகலாமா?" என்று ஆவலுடன் கேட்டான்.

அம்மா, "இதோ வந்து விட்டேன்!" என்று சொல்லிவிட்டு அப்பாவின் அறைக்குள் போனாள். சற்று நேரத்துக்கெல்லாம் கையில் ஒரு அட்டைப் பெட்டியுடன் அம்மா வெளியே வந்தாள்.

"பெட்டியில் என்ன, அம்மா?"

"இந்தப் பெட்டிக்குள்ளே தான் அந்த வீடு இருக்கிறது!" என்று அம்மா சிரித்துக்கொண்டே அந்தப் பெட்டியை அவசர அவசரமாகத் திறந்தாள்.

"என்ன அம்மா, இது! காலுக்குப் போடும் பூட்ஸ் அல்லவா இது? இதையா வீடு என்று சொன்னாய்? அந்த ஐந்து சகோதரர்கள் எங்கே?" என்று ஆச்சரியத்துடன் கத்தினான்.

"என்ன முத்து, உனக்கு இன்னும் தெரியவில்லையா? உன் காலில் ஐந்து விரல்கள் இருக்கின்றன அல்லவா? அவர்களைத்தான் ஐந்து சகோதரர்கள் என்று சொன்னேன். பூட்ஸைத் தான் காற்றோட்டமில்லாத, நகரும் வீடு என்று சொன்னேன்!" என்றாள் அம்மா.

"ஓகோ! சரிதான்; இப்பொழுது தெரிந்தது. இது நிஜக் கதைதான்!" என்று சொல்லி விட்டுக் காலில் பூட்ஸைப் போட்டுக்கொண்டு விளையாடப் போய்விட்டான் முத்து.

## காற்றாடியின் விஷமம்



அம்மா பின்னிப் போட்ட அழகான பனியனில், அம்பிப் பயல் காற்றாடியைக் கட்டி விட்டு விடுகிறான். காற்றோடு காற்றாடி போகிறது; காற்றாடியோடு பின்னல் பனியனும் கலைந்து போகிறது!

# பால்ய நண்பர்கள்

**எஸ்.வி.எஸ்.**

காலம் மாறுகிறது; புல் பூண்டுகள் மாறுகின்றன; மனிதன்கூட மாறிவிடுகிறான். இதெல்லாம் உலகங் கண்ட உண்மை.

ஆனால், நான் மாறாத ஒரு விஷயத்தைப் பற்றிச் சொல்லப் போகிறேன்.

பள்ளிக்கூட நாட்களிலும் அவனுக்கு அந்தப் பழக்கமிருந்தது; இன்றைக்கும் அந்தப் பழக்கமிருக்கிறது. ஆம், அவனை விட்டு அந்தப் பழக்கம் நீங்கவேயில்லை.

அந்தப் பழக்கத்தினால் அன்று அவன் கண்ட பலனுக்கும் இன்று காணும் பலனுக்கும் வித்தியாசம் எவ்வளவு தெரியுமா?

ஆனால் அவனைக் கேட்டால் எல்லாம் ஒன்றுதான் என்பான். அன்றைக்கும் அதுதான் தன் வெற்றியின் ரகசியம், இன்றைக்கும் அதுவேதான் தன் வெற்றியின் ரகசியம் என்பான்.

இதெல்லாம் நன்றாக விளங்க வேண்டுமென்றால், நீங்கள் என் பால்ய நண்பன் சிவமய ஞான சம்பந்தத்தைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும்.

* * *

சிவமய ஞானசம்பந்தம் என் பால்ய நண்பன். நான் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தபோது அவனும் என்னுடன் படித்தான். ஒரே வகுப்பு; ஒரே தெருவில் அடுத்தடுத்த வீட்டில் குடியிருந்தோம். பள்ளிக்கூடத்தில் கூடப் பையன்கள் எங்களை இணைபிரியாத தோழர்கள் என்பார்கள். ஆமாம், நாங்கள் அப்படித்தான் பழகி வந்தோம். ஆனாலும் எங்களுக்குள் பல வித்தியாசங்கள் உண்டு.



ஞானசம்பந்தம் கணக்கில் புலி, ஆனால் நான் எலி. இப்படி ஒவ்வொரு பாடத்திலும் அவன் சூரனாகவும் வகுப்பில் முதல்வனாகவும் இருப்பான். நான் அவனுக்கு நேர் விரோதம். இருந்தாலும் நாங்கள் இருவரும்தான் நண்பர்கள்.

அவன் என்னுடன்தான் மனம் விட்டுப் பழகுவான்; மற்றவர்களுடன் பழக மாட்டான். காரணம் மற்றவர்கள் எல்லோரும் அவனைப் பரிகசிப்பதுதான்.

அந்தக் காலத்தில் அவன் பள்ளிக்கூடத்துக்கு வருகிற தோற்றத்தை நினைத்தால் யாருக்குமே பரிகசிக்கத்தான் தோன்றும். பிஞ்சில் பழுத்த சைவப்பழமாகத் தோன்றுவான்! அவனுடைய அப்பளாக் குடுமியும், நெற்றியில் விளங்கும் பட்டை பட்டையான விபூதிப் பூச்சும், அதனிடையே பௌர்ணமிச் சந்திரன் போன்ற வட்டவடிவமான சந்தனப் பொட்டும், சிவப்புக் கயிற்றில் கோத்த ருத்ராக்ஷத்தை அவன் தன் 'திருமிடற்றில்' அணிந்து தோன்றும் காட்சியும் ஞாபகத்துக்கு வந்தால் இன்றைக்குக்கூட எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது.

இவ்வளவும் போதாது என்று சில அப்பியாசங்கள் வேறு வைத்திருந்தான். படிக்கும் நேரம், எழுதும் நேரம், தூங்கும் நேரம் தவிர மற்ற ஒழிந்த நேரங்களில் அவனைச் சும்மா இருக்கப் பார்ப்பது அரிது. கந்தல், கிழிசல் தாள்களில் 'சிவமயம்' 'சிவமயம்' என்று வரிசையாக எழுத ஆரம்பித்து விடுவான். கிழிந்த தாள்கள் கிடைக்கவில்லையென்றால் புஸ்தகங்களில் வெற்றிடம் கிடைத்த பகுதியில் எல்லாம் 'சிவமயம்' 'சிவமயம்' என்று எழுதிக் கொண்டிருப்பான்! அதனாலேயே அவனுக்குச் சிவமய ஞானசம்பந்தம் என்று பெயர் வந்தது.

சிலர் அவனுடைய வெற்றிக்கெல்லாம் காரணம் அந்தச் சிவமய அப்பியாசந்தான் என்று நினைத்து, அவனைப் போலவே எழுதிப் பார்த்தார்கள். அதனால், சாதாரணமாகப் பரீக்ஷையில் முப்பது மார்க்கு வாங்குபவர்கள் எல்லாம் இருபத்தைந்து 'மார்க்கு' வாங்கலானார்கள். ஆகவே சிவமய ஞானசம்பந்தத்தினுடைய வெற்றியின் ரகசியம் சிவமயம்

அல்ல, வேறு ஏதாயிலுமிருக்க வேண்டும் என்று அவனைக் குடைந்து கேட்டார்கள். அவன்,

"சிவமயம் சிவமயம் சிவமயம் என்பதன்றி
வேறொன்றும் அறியேன் பராபரமே!"

என்று சொல்லிவிட்டான்.

இதெல்லாம் இருபது இருபத்தைந்து வருஷங்களுக்கு முந்தைய சம்பவங்கள். எனக்கும் ஞானசம்பந்தத்துக்கும் அதற்குப் பிறகு யாதொருவிதமான தொடர்பும் நேரவில்லை. அவன் பள்ளிப் படிப்பை முடித்துக்கொண்ட பிறகு எங்கேயோ போனான்; நான் எங்கேயோ போனேன். ஆகவே அவன் என்ன வானான், ஏதுவானான் என்பதொன்றும் எனக்குத் தெரியவில்லை.

* * *

கொஞ்ச நாட்களுக்கு முன் நான் வேலை செய்யும் பாங்கு டைரக்டர்கள், "ஓர் ஊரில் கிளைக் காரியாலயம் தொடங்க வேண்டும். நீ போய் நடத்துகிறாயா? சம்பளம் கூடத் தருகிறோம்" என்றார்கள்.

நான் அதற்குச் சம்மதித்து அவர்கள் குறித்த ஊருக்கு வந்தேன். காரியாலயம் ஆரம்பிப்பதற்குமுன் எவ்வளவோ சாமான்கள் வேண்டியிருந்தன. முக்கியமாக ஓர் இரும்புப் பெட்டி உடனடியாகத் தேவையாயிருந்தது. சென்னையிலுள்ள பிரபல கம்பெனி ஒன்றுக்கு எழுதினேன். அதற்கு இரண்டு நாளில் பதில் வந்தது. அதாவது தற்சமயம் அவர்களிடம் 'ஸ்டாக்' இல்லையென்றும், பதினைந்து நாட்களில் எதிர்பார்க்கப்படுகிறதென்றும், யாராகிலும் நேரில் வந்து வாங்கிச் செல்லும் படியும் அதில் கண்டிருந்தது.

இந்தக் கடிதம் கிடைத்த அன்றையிலிருந்து எனக்கு ஆபீஸ் கவலை போய் வேறொரு கவலை பிடித்துக் கொண்டது. காரணம், அந்தக் கடிதத்தில் நான் நாலு 'சிவமய'ங்களைக் கண்டதுதான்! ஆகவே, பதினைந்து நாட்களுக்குப் பிறகு நான் ஒரு முடிவுக்கு வந்தேன். அதாவது, நானே நேரில் சென்று இரும்புப் பெட்டி வாங்கி வருவது என்று தீர்மானித்தேன்.

அன்றிரவே புறப்பட்டு மறுநாள் சென்னைக்கு வந்தேன். காலை பதினொரு மணிக்கு அந்தப் பிரபல இரும்புக் கடைக்குப் போனேன். அங்கே உட்கார்ந்திருந்த ஒரு குமாஸ்தாவிடம், "ஸ்ரீமான் ஞானசம்பந்தம் இங்கேதான் இருக்கிறாரா, ஸார்?" என்று கேட்டேன்.

"அதென்ன அப்படிக் கேட்கிறீங்க. அவர்தான் இந்தக் கம்பெனியின் முதலாளி!" என்றார் அந்தக் குமாஸ்தா.

"அவரைப் பார்க்க வேண்டுமே!" என்றேன்.

உடனே அவர் ஒரு சிறிய அறைக்குள் என்னை அழைத்துச் சென்றார்.

என்ன ஆச்சரியம்! பதினாறு வயதில் நான் பார்த்த ஞானசம்பந்தத்துக்கும், நாற்பது வயது ஞானசம்பந்த முதலியாருக்கும் இயற்கை இயற்றும் சில மாறுதல்களன்றி வேறு எவ்வித மாறுதலும் இல்லை. அதே பட்டை விபூதி, அதே வட்டப் பொட்டு, அதே ருத்ராக்ஷம்!

"என்ன ஞானசம்பந்தம்?" என்றேன்.

ஞானசம்பந்தத்துக்கு ஒன்றும் புரியவில்லை. இவ்வளவு அறிமுகமானவன் போல் பழகுகிற இவன் யார் என்று தெரியவில்லையே என்று விழித்தான். ஆம், பதினைந்து நாட்களாக 'இவனைத்தான் இருக்க வேண்டும்' என்று ஞானசம்பந்தத்தைப் பற்றியே நினைத்து வந்த எனக்கு ஞானசம்பந்தத்தை நேரில் கண்டவுடன் அடையாளம் கண்டுகொள்வது எளிதாக இருந்தது. அத்துடன் அவன் அப்பளாக் குடுமியும் ருத்ராக்ஷமும் சந்தனப் பொட்டும் பேருதவி புரிந்தன!



ஆனால், எவ்வித அடையாளமுமில்லாது திடும் பிரவேசமாக நுழைந்த என்னை எப்படி ஞானசம்பந்தம் தெரிந்து கொள்ள முடியும்? ஆகவே, எங்களுடைய பால்ய நட்பை நினைவூட்டி என்னை நான் அறிமுகப்படுத்திக் கொண்டேன்.

உடனே என் பெயரைச் சொல்லி அப்படியே கட்டிக் கொண்டான். "எத்தனை நாளைக்குப் பிறகு சந்திக்கிறோம்!" என்று மகிழ்ச்சியும் வியப்பும் கலந்து கூறினான்.

இவ்விதக் குசலப்ரச்னம் ஆனவுடன், "அது சரி! நான் இங்கு இருப்பது உனக்கு எப்படித் தெரிந்தது?" என்றான்.

"இதென்ன பிரமாதம்! நீ இருக்கிற இடம், இரண்டும்

இரண்டும் நாலு என்பதுபோல் ஸ்வச்சமாகத் தெரிந்தது!" என்று சொல்லிக் கொண்டே அவன் அனுப்பிய கடிதத்தைக் கொடுத்தேன்.

"ஓஹோ! என் கையெழுத்தைப் பார்த்துத் தெரிந்துகொண்டு விட்டாயோ?" என்றான்.

"உன் கையெழுத்துத்தான் என் தலையெழுத்து மாதிரி யிருக்கிறதே!" என்றேன்.

"பின்...எப்படி?"

உடனே நான் கடிதத்தின் கீழே சுட்டிக் காட்டினேன். அங்கே 'சிவமயம் சிவமயம்' என்று நான்கு தடவை எழுதியிருந்தது.

"இதனால் நீ இங்கே யிருக்கிறாய் என்பதைக் கலங்கரை விளக்கு மாதிரி எனக்கு விளக்கியது" என்றேன்.

ஞானசம்பந்தம் விழுந்து விழுந்து சிரிக்கத் தொடங்கி விட்டான்!

"ஏன் சிரிக்கிறாய்?" என்றேன்.

"என் பால்ய வழக்கப்படி இந்தக் காகிதத்தில் நான் 'சிவமயம்' எழுதவில்லை. இது ஒரு ரகசியம். இந்தக் கடிதம் கம்பெனியில் இருக்க வேண்டிய நகல். தவறி உனக்கு வந்து விட்டது. இதிலுள்ள சிவமயத்தின் அர்த்தம், இரும்புப் பெட்டியின் மாமூல் விலையை விட நாலு மடங்கு அதிகம் வைத்து உனக்கு விற்க வேண்டும் என்பது. இது என் கீழுள்ள குமாஸ்தாக்களுக்கு நான் குறிப்பிடும் குறிக்கோள்" என்றான் சிவமய ஞானசம்பந்தம்!

எனக்குத் தலை கிறுகிறு என்று சுழன்றது. மயக்கம் போட்டு விழுந்து விடுவேன் போலிருந்தது.

"ஆனால் உனக்குப் பெட்டி இன்று மாமூல் விலைக்கே கொடுக்கிறேன். நீ என் பால்ய நண்பனல்லவா?" என்று கூறினான் ஞானசம்பந்தம்.

அதன் பிறகுதான் என் தலை சுற்றுவது நின்றது.

பெட்டியை வாங்கிக் கொண்டு அன்று மாலை நான் ரயில் ஏறியபோது ஞானசம்பந்தத்தினிடம், "அன்றைக்கும் உன் வெற்றியின் ரகசியம் சிவமயந்தான்; இன்றைக்கும் சிவமயந்தான்! ஆமாம், சிவமயம் தவிர வேறொன்றும் அறியாத பராபரம் அல்லவா நீ?" என்றேன்.

சிவமய ஞானசம்பந்தம் ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரித்தான்!




### அப்படியா?

மானேஜர்:—ஏன் அப்பா, முருகா! நீ குடிப்பழக்கத்தை இன்னும் விட்டொழிக்கவில்லையா? நேற்று இராத்திரி எங்கேயோ பிரக்ஞையற்றுக் கிடந்த உன்னை நாலைந்து பேராகப் பிடித்துத் தூக்கிக்கொண்டு வந்து என் வீட்டில் விட்டார்களே! அவர்களுக்கு நீ என்னிடம் வேலைக்கிருப்பது எப்படித் தெரியும்?

முருகன்:—அதுங்களா? நான்தான் உங்கள் பெயர் அச்சடித்த 'விஸிட்டிங்' கார்டை எப்போதும் சட்டைப் பையில் வைத்திருக்கிறேனே!

★

### சுகந்தான்!

டாக்டர்:—நீங்கள் என்னிடம் ஒரு மாசமாக மருந்து சாப்பிடுகிறீர்களே, ஏதாவது சுகம் தெரிகிறதா?

நோயாளி:—ஆகா! தெரிகிறதே! முன்னே உங்கள் வீட்டுக்கு நடந்து வந்து கொண்டிருந்தேன். இப்பொழுது ரிக்ஷா வைத்துக் கொண்டு வருகிறேன்.

★

### அபிப்பிராயம் சரி!

நண்பன்:—டேய் சுப்பு, நேற்று நான் உன்னிடம் வாங்கிக் கொண்டுபோன புஸ்தகம் ரொம்ப மோசமானது போலிருக்கிறதே!

சுப்பு:—ஏன் அப்படிச் சொல்லுகிறாய்? அதற்குள் புஸ்தகத்தை முழுவதும் படித்து விட்டாயா?

நண்பன்:—இல்லை. நேற்று நான் போகிற வழியில் அந்தப் புஸ்தகத்தைப் பார்க்கில் வைத்து மறந்து போய்விட்டேன். இன்றைக்குப் போய்ப் பார்த்தால் அது அங்கேயே இருக்கிறதே!

★

### சொல்லுவதற்கில்லை!

பல் வலிக்காரர்:—என்ன டாக்டர் ஸார், பல்லை வலியில்லாமல் எடுத்து விடுவீர்களா?

பல் டாக்டர்:—எப்போதும் அப்படி எடுத்து விட முடியும் என்று சொல்லுவதற்கில்லை, ஸார்! ஒருசமயம் என் மணிக்கட்டுக் கூடப் பெயர்ந்து விட்டது!

★

### புதிய நிர்வாகம்!

"ஏன் ஸார்! இதற்கு என்ன அர்த்தம்? 'முற்றிலும் புதிய நிர்வாகத்தின் கீழ் கம்பெனி நடக்கிறது!' என்று விளம்பரம் செய்திருக்கிறீர்கள்; ஆனால் பழைய மானேஜர் தானே இருக்கிறார்?"

"ஆமாம், மானேஜர் முன்பு இருந்தவர் தான். ஆனால் இப்பொழுதுதான் அவருக்குக் கல்யாணம் ஆயிற்று!"

# சந்திர ஹாரம்

ஆசிரியர்........மொழிபெயர்ப்பு
பிரேம்சந்த்..........ரா.வீழிநாதன்

ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர் இரக்கம் தொனிக்கும் பார்வையில் ரமாநாத்தைப் பார்த்து, "எல்லாம் தெரிந்த நீங்கள் இப்படிப் பேசுவது கொஞ்சங்கூட நன்றாயில்லை. நீங்கள் நிரபராதிகளைக் கொலை செய்கிறீர்கள் என்று யார் சொன்னார்கள்? உங்களுடைய பாக்கிய மாளிகையை யல்லவா நீங்கள் சிருஷ்டித்துக் கொள்ளுகிறீர்கள்! இந்த மாதிரி நல்ல தருணம் யாருக்குமே வாய்த்து விடுவதில்லை, ஸார்! எதற்கும் அதிருஷ்டம் வேண்டும்......ஆமாம், இன்றைக்கு என்ன நடந்தது? எதற்காக இப்படிக் கோபித்துக் கொண்டிருக்கிறீர்கள்?—என், ஸப் இன்ஸ்பெக்டர்! உங்களுக்கு ஏதாவது தெரியுமா? வேலையாட்கள் கோபம் உண்டாகும் முறையில் நடந்து கொண்டு விட்டார்களா, என்ன? அப்படி யாராவது நடந்து கொண்டிருந்தால் அவனைச் சுட்டுக் கொல்லுங்கள். தயவு தாட்சண்யமே பார்க்காதீர்கள். என்ன, புரிகிறதா?" என்றார்.

"இதோ போய் நான் விசாரித்துக் கொண்டு வருகிறேன், ஸார்!" என்று சொல்லிக் கொண்டே, ஸப் இன்ஸ்பெக்டர் புறப்பட்டார்.

"அந்தச் சிரமம் உங்களுக்கு எதற்கு, ஸார்? என்னிடம் யாருமே தப்பாக நடந்து கொள்ளவில்லை. நான் ஒரு சின்னஞ் சிறு லாபத்தை உத்தேசித்து என்னுடைய நாணயப் பொறுப்பை இழந்துவிடத் தயாராயில்லை!" என்று ரமாநாத் அழுத்தந் திருத்தமாகச் சொன்னான்.

ஒரு நிமிஷ நேரம் அங்கே அமைதி நிலவியது. யாருக்கும் என்ன பேசுவது என்று புரியவில்லை. ஸப் இன்ஸ்பெக்டர், 'ஆளை எப்படி மறுபடியும் வழிக்குக் கொண்டு வரலாம்?' என்பது பற்றி யோசித்துக் கொண்டிருந்தார். ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர், 'என்னென்ன ஆசைகள் காட்டினால் ஆள் வசப்படுவான்?' என்பது பற்றித் தம் கற்பனையை ஓட்டினார். அதே போல டிபுடி ஸுபரின்டெண்டும் வேறு யோசனையில் ஆழ்ந்தார். கடைசியில் டிபுடி குரலில் வறட்சி தாண்டவமாட, "ரமாபாபு, இது நல்லதுக்குக் காலமில்லை!" என்றார்.

ரமாநாத்தும் ஆத்திரம் பொங்க, "ஆமாம், உங்களுக்கு இது நல்லதுக்குக் காலமில்லைதான். ஆனால் என்னைப் பொறுத்தவரையில் இதுதான் ரொம்ப ரொம்ப நல்ல காலம்!" என்றான்.

"இல்லை, இல்லவே இல்லை. உனக்குப் போதாத காலம் ஆரம்பமாகி விட்டது. அதனால்தான் இப்படி யெல்லாம் பேசுகிறாய். என்ன ஆனாலும் சரி, உன்னை நாங்கள் விடப்போதில்லை. எங்கள் வழக்குத் தோற்றே போனாலும் சரி, உனக்கு ஒரு நல்ல படிப்பினையைக் காட்டாமல் நாங்கள் விடோம். இதுவரை கொடுத்தது போலத்தான் சாட்சியம் கொடுத்தாக வேண்டும். அதற்கு மாறாக ஏதாவது 'கோல்மால்' வேலை செய்தாயானால், நாங்கள் உன்னுடன் நடந்து கொள்ளும் விதமே வேறு விதமாக இருக்கும். அந்த வால் ஆட்டம்தான் எங்களிடம் வேண்டாம் என்கிறேன். போலீஸிடம் உன் ஜபம் சாயாது. எங்களை என்னவென்று எண்ணினாய்? காலிப் பயலே! ஒரே ரிப்போர்ட்டில் உன் கையில் விலங்கு ஏறிவிடும். ஜாக்கிரதை!" என்று மிகக் கடுமையான குரலில் டிபுடி, ரமாநாத்தைப் பார்த்து ஏக வசனத்தில் பேச ஆரம்பித்து விட்டார். அவருடைய பேச்சில் ஆபீஸ் மேஜைகள் எல்லாம் கிடுகிடுத்தன.

இதைச் சொல்லியவாறே அவர் ரமாநாத்தை அப்படியே விழுங்கி விடுபவர்போல முறைத்துப் பார்த்தார். ரமாநாத் கடு

நடுங்கி விட்டான். டிபுடியின் அந்தப் பயங்கரச் சொற்கள் அவன் உள்ளத்தைப் பதறச் செய்து விட்டன. இவர்கள் எல்லோரும் ஒன்று கூடி, ஒரு பொய் வழக்கைச் சிருஷ்டித்து அவனை மாட்டி வைத்துவிட்டால், அவனை யார் காப்பாற்றுவார்கள்? இதை நினைத்ததும் அவன் அப்படியே விலவிலத்துப் போய்விட்டான். சீலமும், வினயமும் குடி கொண்டிருந்த டிபுடி சூபரின்டென்டு, இப்படி ஒரே நிமிஷத்தில் ருத்திர ரூபம் தரித்துக்கொண்டு விடுவார் என்று அவன் கனவிலும் கருதவில்லை. இருந்தாலும் அவன் அவ்வளவு சீக்கிரத்தில் அடங்குபவனாகத் தோன்றவில்லை. ஆகவே அவன் இன்னும் சூடான குரலில், "என்னைப் பலவந்தப்படுத்திச் சாட்சி சொல்லச் செய்துவிட முடியுமோ?" என்று கேட்டான்.

டிபுடி சூபரின்டென்டு பூமி அதிரக் கால்களால் தரையை உதைத்துக்கொண்டு, "ஆமாம், பலவந்தப்படுத்திச் சாட்சி சொல்ல வைப்போம்; கட்டாயம் சொல்ல வைப்போம்!" என்று கர்ஜித்தார்.

"நீங்கள் சொல்லுவது வேடிக்கையாக இருக்கிறதே!"

"போலீஸின் கண்ணில் மண்ணைத் தூவி ஏமாற்றிவிடுவது என்பது சாமான்யப்பட்ட காரியம் என்று எண்ணுகிறாயா, நீ! நீ எண்ணுவதல்லவா வேடிக்கையாக இருக்கிறது! இதோ ஒரே நிமிஷத்தில் இரண்டு சாட்சிகளைச் சிருஷ்டித்து, நீ ராஜத்துரோகத்தில் சம்பந்தப்பட்டவன் என்று நிரூபித்துக் காட்டுவேன்! அப்புறம் ஏழு வருஷத்துக்குக் குறையாமல் நீ சிறையில் அடைந்து கிடக்க வேண்டியதுதான்! கல் உடைக்க வைத்து உன் கைகளை வீங்க வைப்போம். இந்த மாம்பழக் கன்னங்கள் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விடும். என்னை என்னவென்று எண்ணினாய்?" என்றார் டிபுடி.

ரமாகாந்துக்குச் 'சிறை' என்ற சொல்லைக் கேட்டதுமே குலை நடுக்க மெடுத்து விட்டது; சிறை வாழ்க்கையைக் கற்பனை செய்த மாத்திரத்திலேயே, அவன் விலவிலத்து விட்டான். முன்பு கூடச் சிறைத் தண்டனைக்குப் பயந்தே அவன் இந்தச் சாட்சியம் சொல்லுவதற்குச் சம்மதித்தான். அதே பயம் இப்போதும் அவனைக் கவ்விக் கொண்டது.

டிபுடி சூபரின்டென்டு முகபாவத்தைக் கொண்டே மனோபாவத்தை அறியும் ஆற்றல் வாய்ந்தவராக இருந்ததால்... அவனை வழிக்குக் கொண்டு வந்து விடலாம் என்ற நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டது. ஆகவே அவர், "இந்த பாதாம் ஹல்வாவும் பூரியும் அப்புறம் கிடைக்காது. தோல் போன்ற ரொட்டிகளையும் எலும்பு போன்ற அடைகளையும் தின்று ஆக வேண்டும், தின்ன மறுத்தால் வாயில் வைத்துத் திணிப்பார்கள். நாலு மாதக் கடுங்காவல் தண்டனை அனுபவிப்பதற்குள்ளாகவே உன் பிராணன் இந்த உடலை விட்டுப் பிரிந்து போகும். அது மட்டும் அல்ல; வார்த்தைக்கு வார்த்தை வார்டர் உன்னை வைவான்; திட்டுவான்; அடிப்பான்; உதைப்பான். 'பட்டால் தெரியும் எல்லாம்' என்பார்களே, அது போல அனுபவித்தால்தான் உனக்கும் அந்த நரக வேதனையைப் போன்ற வேதனையே இல்லை என்பது தெரிய வரும். எங்களை லேசப்பட்டவர்கள் என்று எண்ணி விடாதே!" என்று மறுபடியும் ஆத்திரம் சீறக் கொட்டினார்.

அவருடைய பேச்சைக் கேட்கக் கேட்க ரமாகாந்தின் முகம் சுண்டிவிட்டது. நிமிஷத்துக்கு நிமிஷம் ரத்தம் உலர்ந்து போவது போன்ற உணர்ச்சியும் அவனுக்கு ஏற்பட்டது. தன் மனோ பலவீனத்தை நினைத்ததும் அவனுக்கு அழுகை அழுகையாக வந்தது. ஆகவே அவன் தழதழத்த குரலில், "உங்களுக்கு என்னை உயிரோடு வைத்து வாட்டவேண்டும் என்று தோன்றினால் வாட்டுங்கள். நான் என்ன செய்ய முடியும்? சிறைக்குத்தானே அனுப்புவேன் என்கிறீர்கள்! இப்பொழுதே அனுப்பி விடுங்கள். அங்கேயே கிடந்து மடிகிறேன். அப்புறம் செத்து விட்டால் உங்களால் ஒன்றும் செய்ய முடியாதல்லவா? நீங்கள் என்னை ஒழித்துவிட்டு மறு காரியம் பார்ப்பதென்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கும் பொழுது, எனக்குச் சாவதைத் தவிர வேறு வழி ஏது? உங்களை எதிர்த்து வாதாட எனக்குச் சக்திதான் ஏது? நடக்கிறது, நடக்கட்டும். அதற்காக நான் கவலைப்படவில்லை!" என்றான்.

அவனுடைய மனம் பலமின்மையின் எல்லையைக் கடந்து விட்டது. இந்தச் சமயத்தில் அவனுக்கு யாராவது நாலு நல்ல வார்த்தைகளாகச் சொன்னாலோ, அல்லது சற்று அனுதாபம் காட்டினாலோ போதும்; அவனிடம் காரியத்தைச் சாதித்துக் கொண்டு விடலாம். அதட்டல்

மிரட்டலைவிட அது ஆயிரம் பங்கு அதிகமாக வேலை செய்யும். அவன் சொன்ன சொற்படி ஆடவும் ஆரம்பித்து விடுவான். ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர் இந்தத் தருணத்தை நன்றாகப் பயன் படுத்திக் கொண்டு விட்டார். அவர் அவன் கட்சியை ஆதரித்து டிபுடியிடம், "நீங்கள் ஆசாமியைச் சரியாகப் புரிந்து கொள்ளாமலே 'படபட' வென்று பேசிவிடுகிறீர்கள், ஸார்! ஆளைப் புரிந்து கொள்ளாமல் அதிகார தோரணையில் பேசிவிட்டால் மட்டும் காரியம் ஆகிவிடுமா, ஸார்! இம்மாதிரிச் சாட்சி சொல்லுவதென்றால் புத்தியுள்ள எவனுக்குமே தப்பாகத் தோன்றுவது சகஜம்தான். ஏன், எல்லாருக்குமே அது இயற்கை! அப்படியிருக்கும்பொழுது, தன்மானம் உள்ள எவனுமே போலீஸாரின் கைப் பொம்மையாக விரும்பமாட்டான். அதைத் தப்பாக நாம் எடுத்துக் கொள்ளக் கூடாது. ரமாகாந்தபாபுவின் ஸ்தானத்தில் நானே இருந்தாலும் அப்படித்தான் சொல்லுவேன். ஆனால் அதற்காக இவர் நமக்கெதிராகச் சாட்சியம் சொல்லுவார் என்று தப்பர்த்தம் கற்பித்துக் கொள்ளலாகுமா? நீங்கள் உங்கள் காரியத்தைப் பாருங்கள். இவரைப் பற்றித் துளிக்கூடக் கவலைப்பட வேண்டாம். நான் சொல்லுவதைக் கேளுங்கள்!" என்றார்.

பிறகு அவர் ரமாகாந்தின் கையைப் பிடித்துக் கொண்டு, "நீங்கள் வாருங்கள், ஸார்! நாம் போய் ஏதாவது நல்ல ரிக்கார்டுகள் கேட்போம்" என்றுகூப்பிட்டார்.

ரமாகாந்த் கோபித்துக் கொண்டிருக்கும் குழந்தையைப் போலக் கைகளை விடுவித்துக் கொண்டு, "என்னை அவமானப் படுத்தியதுபோதும், ஸார்! விட்டு விடுங்கள்! நான்தான் சிறையில் கிடந்து அழுகிச் சாகப்போகிறவனாயிற்றே! எனக்கும் உங்களுக்கும் என்ன பேச்சு வேண்டிக் கிடக்கிறது?" என்றான்.

ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர் அவன் தோள்கள் மீது கையைப் போட்டுக் கொண்டு, "நீங்கள் இப்படி யெல்லாம் பேசுவது கொஞ்சங்கூட நன்றாயில்லை. நீங்கள் எதற்கு ஸார், சிறையில் கிடந்து வாடப்போகிறீர்கள்? உங்களைச் சிறைக்கு அனுப்ப எந்தப் பயலுக்கு ஸார், தைரியம் இருக்கிறது?" என்றார்.

டிபுடி கடைசி வரை தன் கெடுபிடியையும் விட விரும்பவில்லை. ஆகவே அவர் மிக மிடுக்குடன் ரமாகாந்தை முன்பின் பார்த்தறியாதவர் போல, "இவர் நம்முடன் நல்ல விதமாக நடந்து கொண்டால் நாமும் நல்ல விதமாக நடந்து கொள்ளுவோம். ஆனால் நமக்கு எதிராக ஏதாவது விஷமம் செய்வதாகத் தெரிந்தால் விடமாட்டோம். கண்களில் விரலை விட்டு ஆட்டிவிட்டுத்தான் மறு காரியம் பார்ப்போம்; சித்திரவதை கூடச் செய்வோம். நினைவிருக்கட்டும், ஜாக்கிரதை!" என்றார்.

சிறிது நேரத்துக்கெல்லாம் சர்க்கார் தரப்பு வக்கீலும் பப்ளிக் பிராஸிக்யூடரும் ஒரு காரில் வந்து இறங்கினர்.

## நாற்பத்தோராம் அத்தியாயம்
## சட்டம் சொல்லுகிறது!

ரத்தன், தான் எழுதும் கடிதங்களில் எல்லாம் பத்மாவுக்குத் தன்னால் ஆனவரை ஆறுதல் அளித்து வந்தாள்; ஆனால் தன்னைப் பற்றி ஒன்றுமே எழுதுவதில்லை. துயரப்படும் ஓர் ஆத்மாவுக்கு இன்னொரு துயரக் கதையைச் சொல்லுவதினால் என்ன பயன்? ஒரு காலத்தில் பணத்தைப் பணம் என்று பாராமல் தன் இஷ்டப்படி செலவிட்ட ரத்தன், கடந்த ஒரு மாத காலமாக அரை வயிற்றுக் கஞ்சிக்குக்கூட ஆலாய்ப் பறக்கும் நிலையை அடைந்து விட்டாள். அவளுடைய மண வாழ்க்கையில் யாதொரு விதமான சுகமும் இல்லாமல் இருந்தபொழுதிலும் எதற்கும் குறைவில்லாமலிருந்தது. பாதையும் நன்றாக இருந்து ஆள் கட்டும் பண வசதியும் சௌகரியமாக இருந்து விட்டால், சோனிக் குதிரையின் மீதேறிக் கூடப் பிரயாணத்தை முடித்து விடலாம் அல்லவா? குதிரையும் நன்றாக இருந்து விட்டாலோ கேட்க வேண்டியதேயில்லை; வெகு சுகமாகப் பிரயாணம் முடிந்து விடும். ரத்தனின் நிலைமையோ சோனிக் குதிரையின்மீது சவாரி செய்பவனின் நிலைமையைத்தான் ஒத்திருந்தது. அவள் மிக மெதுவாக ஆடி அசைந்து கொண்டு 'காமா சோமா' வென்று எப்படியோ தன் வாழ்க்கைப்

பிரயாணத்தைத் தொடர்ந்து நடத்திக் கொண்டிருந்தாள். பிறர் வாயுவேக மனோ வேகமாகச் செல்வதைக் காணும்பொழுது அவளுக்கு, 'இதேதடா சனியன்! பிடித்துத் தள்ளினால்கூடப் போகமாட்டேன் என்கிறதே!' என்று ஆத்திரம் ஆத்திரமாக வந்திருக்கலாம். அல்லது 'அவர்களைப் போல நாமும் இருக்கக் கொடுத்து வைக்கவில்லையே!' என்ற ஏக்கம் ஏற்பட்டிருக்கலாம். அதுவும் இல்லையெனில், 'நாமும் அம்மாதிரி வாழ்க்கை நடத்தினால் என்ன?' என்றாவது ஆசை ஏற்பட்டிருக்கலாம். ஆனால் அவளுடைய உள்ளத்தில் அம்மாதிரி எண்ணங்கள் எழவில்லை; அதற்காக அவள் வருந்தவும் இல்லை.

தும்பில் கட்டுண்டிருக்கும் பசு 'போதும்' என்ற மனத்துடன் தனக்குக் கிடைக்கும் புண்ணாக்கிலும் தவிட்டிலும் லயித்து விடுகிறது. எதிரே பச்சைப் பசேல் என்று வளர்ந்திருக்கும் புற்களைக் கண்டும் கூட அது தும்பைத் தெறித்துக் கொண்டு ஓட முயற்சிப்பதில்லை. அதற்கு மெல்லிய தும்பில் கட்டுண்டிருப்பதும் ஒன்றுதான். தடியான இரும்புச் சங்கிலியில் கட்டுண்டிருப்பதும் ஒன்றுதான். இரண்டுக்கும் உள்ள வித்தியாசம் அதற்குத் தெரிவதில்லை. பொதுவாக, யௌவனப் பருவத்தில்



காதற் பசி அவ்வளவாக ஏற்படுவதில்லை; தளுக்கிலும் மினுக்கிலும்தான் அதிக ஆசை ஏற்படுகிறது. காதற்பசி பின்புதான் உண்டாகிறது. ரத்தனுக்குத் தளுக்கி மினுக்கிக் கொள்ளுவதற்கான சகல சாதனங்களும் கிடைத்திருந்தன. ஆகவே இளமை முறுக்கேறிய அவனுடைய ஆத்மா, ஆடை அலங்காரங்களையும் தளுக்கு — மினுக்கையும் நாடியதில் வியப்பொன்றும் இல்லை. எல்லாரையும் போல உண்டு, உடுத்தி, ஓடி யாடித் தளுக்கி மினுக்கிக் கொண்டு திரிவதுதான் அவனுக்கு வாழ்க்கையின் குறிக்கோளாகப் பட்டது. ஆகவே அவன் ஆழமான நீரில் இறங்க முயற்சிக்கவும் இல்லை; விரும்பவும் இல்லை. அதில் ஏதாவது பிரயோசனம் இருப்பதாகக்கூட அவனுக்குத் தோன்றவில்லை. செல்வம் மனிதனின் மனத் துயரத்தை வெகுவாகக் குறைக்கிறது என்பதில் யாருக்கும் ஆட்சேபனை இருக்க முடியாது. கையில் காசு காசு உள்ளவர்களுக்குத்தான் துயரங்களை மறப்பதற்கு, சினிமா, டிராமா, ஆடல் பாடல், நாய் — பூனை என்று எத்தனையோ விதமான வசதிகள் கிட்டியிருக்கின்றனவே! ஆனால் கையில் காசில்லாதவனுக்குத் தன் துயரங்களை மறப்பதற்கு ஏதாவது வழியிருந்தால்தானே? அவன் அழவேண்டுமானால் அழலாம்; அல்லது தன் தலைவிதியை நொந்து கொள்ளலாம். இல்லாவிட்டால் இந்த உலகத்தை — இந்த அநித்திய வாழ்க்கையை வெறுத்துத் தூக்குப் போட்டுக் கொண்டு மடியலாம். அதைத் தவிர வேறென்ன செய்ய முடியும்?

ரத்தனின் வாழ்க்கையில் ஒரு திடீர் மாறுதல் ஏற்பட்டது. அவனுடைய அதிர்ஷ்ட சக்கரம் புரண்டு கொடுத்தது. அதன் பயனாக அவனுடைய இன்பக் கனவுகள் கலைந்தன. இல்லாமை என்னும் பயங்கர எலும்புக்கூடு அவன் கண்முன் காட்சி அளித்தது.

இவை யெல்லாம் அவன் தன் கைகளாலேயே செய்து கொண்டவை. பண்டித இந்துபூஷண் மரணத்துக்கு அஞ்சாத கும்பலில் சேர்ந்தவர். ஆகவே எவ்வளவுதான் உடல் நலிவுற்றாலும், பத்தியமாகவும் கட்டுப்பாட்டுடனும் இருந்து விட்டால் வெகு நாட்கள் வரை உயிர் வாழ முடியும் என்ற பிரமை அவருக்கு ஏற்பட்டிருந்தது. ஆகையால் அவர் தம் வாழ்க்கையில் ஒரு வரைமுறையையும் பத்தியத்தையும் கடைப்பிடித்து வந்தார். அப்படியிருக்கும் பொழுதுவினில் அவருக்குத் தொந்தரவு கொடுக்க மரண தேவதைக்குப் பைத்தியமா, என்ன? சாகும் தறுவாயில்தான் அவருக்கு 'உயில் எழுதி வைத்துவிட்டால் தேவலை' என்ற எண்ணம் எழுந்தது. ஆனால் ரத்தன் 'உயில்' என்ற சொல்லைக் கேட்டதுமே மிகவும் அச்சமும் திகிலும் கொண்டான். அதனால் அந்தச் சமயம் பண்டித இந்துபூஷண் உயில் பேச்சை எடுக்காமல் இருப்பதே நல்லது என்று பேசாமல் இருந்து விட்டார். அதற்குப் பிறகு அவர் தம் உணர்வை இழந்துவிட்டார். ஆகையால் உயில் எழுதவேண்டும் என்ற விஷயம் அப்படியே ஒத்திப் போடப்பட்டு விட்டது.

பண்டித இந்துபூஷண் இறந்த பிறகு, ரத்தனுடைய மனம் மிகவும் விரக்தியடைந்து விட்டது. ஆகவே அவன் மனம் எந்த விஷயத்திலும் செல்லவில்லை. ஆனால் இம்மாதிரிச் சந்தர்ப்பங்களில்தான் மனிதன் மிகவும் சர்வ ஜாக்கிரதையாக இருந்திருக்க வேண்டும். அவன் அப்படிச் செய்யாமல் சகல விவகாரங்களையும் மணிபூஷணிடம் ஒப்படைத்து விட்டான். அதே மணிபூஷண் அவனுடைய சொத்து முழுவதையும் சிறுகச் சிறுக அபகரித்துத் தன்னுடைமை யாக்கிக் கொண்டு விட்டான். அவன் செய்த செப்பிடு வித்தைகள் எல்லாம் கள்ளங்கபட மற்ற ரத்தனுக்குப் புரியவே யில்லை. நன்றாக வலை வீசி முடித்த பின் ஒரு நாள் மணிபூஷண் ரத்தனிடம் வந்து, "இந்தப் பங்களாவை இன்று காலி செய்தாக வேண்டும். இதை நான் விற்று விட்டேன்!" என்றான்.

ரத்தன் வியப்புற்றுச் சற்று உரத்த குரலில், "நான்தான் அப்பொழுதே இதை விற்கவேண்டாம் என்று உன்னிடம் சொன்னேனே! எதற்காக அவசரப்பட்டு விற்றாய்?" என்று கேட்டான்.

மணிபூஷண் இவ்வளவு நாட்கள் அவனிடம் காட்டி வந்த மரியாதையை மூட்டை கட்டி வைத்துவிட்டு, குரலில் கோபம் தொனிக்க, "சொன்ன சொல்லை இவ்வளவு சீக்கிரம் மறந்து விடுகிறீர்களே! இது ரொம்பக் கெட்ட பழக்கம். இதே இடத்தில்தானே நான் அன்று இவ் விஷயத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்தேன்; நீங்களும் சம்மதித்தீர்கள். விற்ற பிறகு நீங்கள் பேச்சை மாற்றுவது கொஞ்சங்கூட நன்றாயில்லை. இன்றைக்கே இதைக்

காலி செய்துவிட்டு நீங்களும் என்னுடன் வந்தாக வேண்டும்" என்றான்.

"நான் இங்கேயேதான் இருக்கப் போகிறேன்."

"அதெல்லாம் கூடாது!"

"என்னைத் தடுக்க நீ யார்? நான் ஒன்றும் நீ வைத்த ஆள் இல்லை!"

"உங்களைச் சம்ரக்ஷிக்க வேண்டிய பொறுப்பு என்னைச் சேர்ந்தது. என் குடும்ப கௌரவத்தைக் காத்துக் கொள்ளும் பொருட்டு, நான் உங்களை என்னுடன் அழைத்துத்தான் செல்வேன்" என்றான் மணிபூஷண்.

ரத்தன் உதட்டைக் கடித்துக் கொண்டு, "எனக்கு என் மரியாதையைக் காத்துக் கொள்ளத் தெரியும். நீ ஒன்றும் அதற்கு ஒத்தாசை செய்ய வேண்டாம். என் அனுமதியில்லாமல் நீ இந்த வீட்டுத் துணி துப்பட்டையைக் கூட விற்கக் கூடாது; உன்னால் விற்கவும் முடியாது!" என்றாள்.

"இந்த வீட்டிலோ, என் சித்தப்பாவின் சொத்திலோ உங்களுக்கு யாதொரு விதமான சம்பந்தமும் கிடையாது. வேண்டுமானால் நீங்கள் என்னிடம் ஜீவனாம்சம் கோரலாமே தவிர வேறொன்றும் செய்ய முடியாது. நினைவிருக்கட்டும்!" என்று ஒரு பேரிடியைத் தூக்கிப் போட்டான் மணிபூஷண்.

"நீ ஏதாவது குடித்து விட்டுக் கிடித்து விட்டு வந்திருக்கிறாயா? அர்த்தமில்லாமல் என்ன வெல்லாமோ உளறுகிறாயே!" என்று ரத்தன் வியப்புடன் கேட்டாள்.

இதைக் கேட்டதும் மணிபூஷண் இன்னும் கடுமையான குரலில், "நான் அப்படியெல்லாம் அர்த்தமில்லாமல் உளறுவதற்குக் குடிகாரன் இல்லை. நீங்களோ படித்தவர்கள். அது மட்டும் அல்ல; ஒரு பெரிய வக்கீலின் சகவாசமும் கூட. சட்ட சம்பந்தமான அநேக விஷயங்களைத் தெரிந்து கொண்டிருப்பீர்கள் என்றும் எண்ணுகிறேன். அவிபக்த குடும்பத்தில், விதவைக்குத் தன் புருஷனுடைய சொத்தில் யாதொரு விதமான உரிமையும் கிடையாது. என் அப்பாவுக்கும் சித்தப்பாவுக்கும் இதுவரை பாகபத்திரமே ஆகவில்லை. சித்தப்பா இங்கே யிருந்தார்; நாங்கள் இந்தூரில் இருந்தோம். அதைக் கொண்டு எங்களுக்குள் பாக பத்திரம் ஆகிவிட்டது என்று ஒரு நாளும் நிரூபிக்க முடியாது. சித்தப்பா தம் சொத்தை உங்களுக்குக் கொடுக்க வேண்டும் என்று எண்ணியிருந்தால் கட்டாயம் ஒரு உயில் எழுதி வைத்திருப்பார். சட்டப்படி பார்க்கப்போனால் அந்த உயில் செல்லவும் செல்லாது. இருந்தாலும் நாங்கள் மரியாதைக்காக அதற்கு விட்டுக் கொடுத்திருப்போம். அவர் உயில் எழுதி வைக்காமல் போனதற்குக் காரணம், சட்டப்படி நடவடிக்கை எடுத்துக் கொள்ளுவதற்கு இடம் கொடுக்கக்கூடாது என்பதாகத்தான் இருக்க வேண்டும். இன்றைக்குள் நீங்கள் இந்தப் பங்களாவைக் காலி செய்துதான் ஆகவேண்டும். மோட்டார் முதலிய மற்ற சாமான்களை ஏலம் போட்டு விடுவதாக உத்தேசம். உங்களுக்கு வர இஷ்டமிருந்தால் என்னுடன் வாருங்கள்; இல்லாவிட்டால் இங்கேயே இருங்கள்! இங்கே நீங்கள் இருப்பதற்குப் பத்துப் பதினைந்து ரூபாய் வாடகைக்குள் ஒரு வீடு இருந்தால் போதுமானது. உங்கள் மாதாந்திரச் செலவுக்காக ஐம்பது ரூபாய் தருவதாகவும் நான் நிர்மாணித்து விட்டேன். அதைவிட அதிகமாக உங்களுக்குத் தேவையில்லை என்பது என் அபிப்பிராயம்" என்றான்.

ரத்தன் ஒன்றுமே பதில் பேசவில்லை. சிறிது நேரம் அவள் அறிவிழந்தவள்போல் உட்கார்ந்திருந்தாள். பிறகு, மோட்டாரைக் கொண்டு வரச் சொன்னாள். பகல் முழுவதும் வக்கீல்களிடம் ஓடி ஆலோசனை கேட்டாள். பண்டித இந்துபூஷணுக்கு எத்தனையோ வக்கீல் நண்பர்கள் இருந்தனர். அவர்கள் எல்லாரும் அவள் சொன்ன விருத்தாந்தம் அனைத்தையும் கேட்டுவிட்டு அனுதாபம் தெரிவித்தனர். எல்லாம் தெரிந்த இந்துபூஷண் உயில் எழுதாமல் போனதைக் குறித்து வியப்பெய்தினர். அவள் கட்சி வெற்றிபெற வேண்டுமென்றால் ஒரே ஒரு உபாயம் மட்டும்தான் பாக்கியிருந்தது. அதாவது, அவள் தன் கணவருக்கும் அவருடைய தமையனுக்கும் பாக பத்திரம் ஆகிவிட்டது என்பதை நிரூபிக்க வேண்டும். அப்படி நிரூபித்தால்தான் அவள் அந்தச் சொத்துக்கு உடைமைக்காரியாக—எஜமானியாக ஆக முடியும். அதைவிட்டால் அவளுக்கு வேறு வழியே யில்லை.

ரத்தன் தன் துர்ப்பாக்கியத்தை நொந்து கொண்டே வீடு திரும்பினாள். 'நமக்குச் சொந்த மில்லாத ஒரு சொத்தில் பாத்தியதை கொண்டாடுவதற்காகப் பொய் வழக்கு நடத்துவதாவது! கூடவே கூடாது' என்று அவள் தன் மனத்துள்

முடிவு செய்து கொண்டாள். ஆனல்...... இம்மாதிரிச் சட்டம் செய்தது யார்? பெண் அவ்வளவு தாழ்ந்தவளா? சமூகம் ஏன் பெண்ணை இப்படித் தள்ளி வைக்க வேண்டும்? ஆணுக்கொன்று; பெண்ணுக்கொன்று! இது என்ன நியாயமோ?

பகல் முழுவதும் ரத்தன் கவலையில் ஆழ்ந்து வாய் திறவாமல் உட்கார்ந்திருந்தாள். இவ்வளவு நாட்களாக அவள் தன்னை அந்த வீட்டுக்கு எஜமானியம்மாளாக அல்லவா எண்ணிக் கொண்டிருந்தாள்! அது எவ்வளவு பெரிய பிழை என்பது அவளுக்கு இப்பொழுதுதான் தெரிந்தது. அவளுடைய கணவர் உயிருடன் இருந்த காலத்தில் அவளை அண்டிப் பிழைத்தவர்கள், இன்று அவளுடைய பாக்கியத்தை நிர்ணயிக்கும் பிரும்மாக்களாக அல்லவா ஆகிவிட்டார்கள்! ரத்தனைப் போன்ற தன்மானம் உள்ள எந்தப் பெண்மணியால்தான் இந்த மாபெரும் அவமானத்தைச் சகித்துக் கொண்டிருக்க முடியும்? பண்டித இந்து பூஷண் சம்பாதித்தார் என்பது உண்மையே. ஆனல் இந்தக் கிராமம் வாங்கியது, இந்தக் கட்டிடங்கள் கட்டியது எல்லாம் ரத்தன் தானே? ரத்தன் இவ்வளவு நாட்கள் வரை தன் வருங்காலத்தைப் பற்றி அக்கறை கொண்டிருக்கவில்லை; இந்தச் சொத்துத் தான் தன் ஜீவனோபாயத்துக்கு மூல காரணமாயிருக்கும் என்றும் அவள் எண்ணவில்லை. தன் தனயன் வாழ்க்கையில் முன்னேறிப் பணமும் புகழும் படைத்துச் செழித்துக் கொழிப்பதைக் காணும் பொழுது தாயார் மட்டற்ற மகிழ்ச்சி கொள்வாள் அல்லவா? அதே போல ரத்தன் அந்தச் சொத்தை வாங்கிச் சேர்த்துச் செப்பனிட்டு அழகுறச் செய்யும் விஷயத்தில் புளகாங்கிதமுற்றாள். தன்னுடையது என்ற கர்வமும் செருக்கும் இருந்ததே யொழிய அதில் தன்னலம் என்பதே தலைகாட்டவில்லை. ஆனல் கணவரின் கண்கள் மூடியதுதான் தாமதம்; அவள் வளர்த்துப் பெரிதாக்கிய அந்தக் குழந்தைகளைப் பிடுங்கிக் கொள்ளப் பிறர் முயன்றனர். இனிமேல் அவளுக்கு அவைகளிடம் யாதொரு விதமான உரிமையும் கிடையாதாம்! 'பின்னல் இந்த மாதிரி நடக்கும்' என்பது மட்டும் தெரிந்திருந்தால், அவள் முன்னுலேயே பணத்தை வாரிச் செலவிட்டிருப்பாள்; தான — தருமங்கள் செய்திருப்பாள். செட்டும் கட்டுமாகக் குடித்தனம் நடத்திச் சொத்துச் சேர்த்திருக்க மாட்டாள். பண்டித இந்து பூஷண் சம்பாதித்தார் என்று சொல்லலாமே தவிர, அப்படியொன்றும் அவருக்குப் பிரமாதமாக அளவற்று வரும்படி வந்து விடவில்லை. அந்தப் பணத்தைக் கொண்டு அவள் கோடை காலத்தில் சிம்லாவுக்குப் போயிருக்கக் கூடாதா? இன்னும் நான்கைந்து வேலைக்காரர்களைப் போட்டுக் கொண்டு ஆனந்தமாக வாழ்க்கை நடத்தியிருக்கக் கூடாதா? இல்லை, நகைகள் செய்து போட்டுக் கொள்ளுவதாகவேயிருந்தாலும், அவள் வீட்டைவிட இன்னும் அதிகப் பெறுமானமுள்ள நகைகள்கூடச் செய்து போட்டுக்கொண்டிருக்கலாமே! ஆனல் எவ்விஷயத்திலும் அவள் எல்லை மீறிச் சென்றதேயில்லை. அவள் அப்படியெல்லாம் வாழ்க்கையை வரையறுத்து நடத்தியது இந்தக் கனவு காண்பதற்காகத் தானு? இது கனவா? ஆம், இதைக் கனவு என்று சொல்லுவதைத் தவிர வேறென்னவென்று சொல்ல முடியும்? நேற்று அவளுடைய உடைமையாக இருந்ததை இன்று அவள் எடுத்துப் பார்க்கக் கூடாது என்ருல் என்ன அர்த்தம்? அப்பப்பா! எத்தனை பயங்கரமான கனவு! அதுவும் அவள் கண்முன் விழித்துக் கொண்டிருக்கும் பொழுதேயல்லவா நடந்து விட்டது! இன்று அவள் ஓர் அனதை! நேற்றுவரை அவள் பிறருக்குப் பிச்சையிட்டு உண்டாள். இன்று என்னடா வென்ருல் அவளேயல்லவா கையில் கப்பறை ஏந்தும்படியாகி விட்டது! உண்ண உணவில்லை; உடுக்க உடையில்லை; தங்க இடம் இல்லை!

உடனே அவள் சிந்தனையில் ஒரு புரட்சி ஏற்பட்டது! நான் என்னை அனதை என்று எண்ணுவானேன்? பிறரிடம் கை நீட்டிப் பிச்சை கேட்கவேண்டிய அவசியம் என்ன? உலகத்தில் எத்தனையோ லட்சக் கணக்கான பெண்கள் கூலி வேலை செய்து பிழைக்கவில்லையா? அதுபோல நானும் ஒரு வேலை செய்து பிழைக்க முடியாதா? நான் துணிமணிகள் தைக்கலாம்; ஒரு சின்னஞ்சிறு கடை வைக்கலாம்; குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கலாம். இப்படியெல்லாம் நான் செய்தால் ஜனங்கள் எள்ளி நகையாடுவார்களே! ஏளனம் செய்வார்களே! சிரிப்பார்களே! அவர்கள் சிரித்தால் சிரித்து விட்டுப் போகட்டும். நமக்கு என்ன, அது நம்மை ஏளனம் செய்வதாக ஆகாது; சமூகம் தன்னைத்தானே ஏளனம் செய்து கொள்ளுவதாகத்தான் ஆகும்! (தொடரும்)

# சித்தப்பிரமை



"ராபா"

"அந்த மனிதனுக்குப் பைத்தியம் தான் பிடித்திருக்க வேண்டும், இப்படி ரதிமாதிரி ஒரு பெண்டாட்டியைத் தவிக்க விடுவதற்கு! வயதாகவில்லையா, குட்டிச் சுவர் மாதிரி? பாவம், லீலா தான் என்ன செய்வாள்? அவளுக்கு அந்த டில்லியில் யார் ஆதரவு? அவளுக்காக இல்லா விட்டாலும் அந்தக் குழந்தைகளுக்காகவாவது இந்த மனிதன் இப்படி இருக்க வேண்டாம்... என்ன... உங்களைத்தான்! நான் பாட்டுக்குச் சொல்லிக் கொண்டே இருக்கிறேன், நீங்கள் பாட்டுக்குப் பேப்பரில் கவிழ்ந்து கொண்டு சும்மா இருக்கிறீர்களே!"

"எல்லாப் பேச்சையும் நீயேதான் பேசிக் கொண்டிருக்கிறாயே, நான் என்ன சொல்லக் கிடக்கிறது!"

"சரி, சரி! இது வேறு! எல்லாம் உங்கள் ஆப்த சிநேகிதரைப் பற்றித் தான் சொல்கிறேன்! வர வர அவர் போக்கு ரொம்ப மோசமாகி வருகிறது என்று லீலா வந்து கதறிவிட்டுப் போகிறாள்; கண்ணைருவியாக இருக்கிறது!"

"அதற்கு என்னை என்ன செய்யச் சொல்கிறாய்? நீ வேண்டுமானால் அவளைக் கட்டிக் கொண்டு ஒரு குரல் அழலாம்!"

"ரொம்ப கெட்டிக்காரத்தனமாகப் பேசுவதாக எண்ணமோ! உங்கள் அத்

யந்த நண்பர், வீடு, பெண்டாட்டி, பிள்ளை குட்டி எல்லாவற்றையும் மறந்து விட்டு, இந்த வயதில் இப்படி இருக்கிறாரே! நீங்கள் ஏதாவது சொல்லிச் சரிப்படுத்தக் கூடாதா?"

"நான் என்ன செய்யக்கூடும்? வேண்டுமானால் நானும் அவனுக்குத் துணையாகப் போகலாம்!"

"ஆமாம், போகமாட்டீர்களோ! அது கிடக்கிறது! அந்த மனுஷன் இப்பொழுதெல்லாம் வீட்டை விட்டுப் போனால் பாதி ராத்திரி வரையில் திரும்பி வருவதில்லையாம். சில சமயம் மறுநாள் காலையில்தான் வருகிறாராம். கட்டின பெண்டாட்டிக்கு மனது எப்படி இருக்கும்?"

"சரி சரி! போ! இந்தப் பெண்பிள்ளைகளுக்கே எப்பொழுதும் சந்தேகம்தான்! கோபால் அப்படிப்பட்ட மனிதன் இல்லை!"

"ஐயோ பாவம்! அவ்வளவு நல்ல மனுஷனாக இருந்தால் ஏன் இப்படிச் செய்கிறாராம்! அவர் எக்கேடாவது கெட்டுப் போகட்டும். வேளா வேளைக்கு வீட்டுக்கு வந்து தொலையக் கூடாதா? இந்தக் காலத்தில் பகலில் தெருவில் போனாலே திகிலாக இருக்கிறதே! நீங்கள் ஆபீசுக்குப் போய் விட்டுத் திரும்பி வரும் வரையில் வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டிருக்கிறேன் நான்! பாவம், லீலாவுக்கு எப்படி இருக்கும், புருஷன் ராத்திரி முழுவதும் வீட்டுக்கு வராமல் இருந்தால்? மனுஷன் என்ன ஆனானோ என்னவோ என்ற கிலி பிடித்தே அவள் அரை உடம்பாகி விட்டாள். அந்த மனுஷனுக்கு என்ன கேடு வந்து விட்டது என்று நீங்கள் விசாரிக்கக் கூடாதா? உங்களுக்கும் அவருக்கும்தான் பிராண சிநேகிதமாயிற்றே!"

"சிநேகமாயிருந்தால் அதற்காக அவன் சொந்த வாழ்க்கையில் எல்லாம் நான் தலையிட முடியுமா?"

"இந்த மாதிரி சந்தர்ப்பத்தில் தலையிட்டுத்தான் ஆக வேண்டும். அந்தக் குழந்தைகளுக்காகவாவது அந்த ஆசாமியை நல் வழிக்குத் திருப்ப வேண்டும். இதை உங்கள் சிநேகிதருக்காக நீங்கள் அவசியம் செய்தாக வேண்டும்."

"ஆஸ்பத்திரியிலிருந்து வெளி வந்தது முதல் அவன் ஒரு மாதிரியாகத்தான் இருக்கிறான். இப்போதெல்லாம் அவன் என்னோடு முன்போல் நெருங்கிப் பழகுவதில்லை. ஓரிரண்டு தரம், என்னைக் கண்டால்கூட ஏதோ ஞாபக மறதி யுள்ளவன்போல் நடந்து கொள்கிறான்."

"ஆமாம், லீலாகூடச் சொல்லி யிருக்கிறாள். லாகூரிலிருந்து அந்த அமளியில் அடிபட்டு வந்து ஆஸ்பத்திரியில் கிடந்து பிழைத்தது முதல், அவர் ஏதோ சித்தப் பிரமை கொண்டவர்போல் நடந்து கொள்கிறார் என்கிறாள். நேரில் போய் அவரைக் கண்டு பேசி என்னதான் காரணம் என்றாவது தெரிந்து வாருங்களேன்!"

"அப்பப்பா! இந்தக் குண்டாக்களின் கத்திக்காவது தப்பலாம்! பெண்கள் பேச்சுக்குத் தப்ப முடியாது......!"

"சரி! பெண்களைப் பற்றி உங்கள் பிரசாரம் இருக்கட்டும். அவரை இன்றைக்காவது பார்ப்பீர்களா மாட்டீர்களா?"

"ஆகா! அப்படியே பார்க்கிறேன். அம்மணி! தங்கள் உத்தரவு! ஆபீசுக்கு நேரமாகிறது!"

ஸையத் இப்படி சரணாகதி அடைந்ததும்தான் அவர் மனைவி ஷீலாவின் மனம் நிம்மதி யடைந்தது; வாயும் ஓய்ந்தது. வெகு சுறுசுறுப்பாகக் கால் சொக்காய், கோட்டு, டை, பூட்ஸ் எல்லாம் அவசர அவசரமாக எடுத்துக் கணவரைச் சிங்காரித்து ஆபீசுக்கு அனுப்பினாள்.

"மறவாமல் அவரைப் பார்த்து ஒரு வழி பண்ணுங்கள்!" என்று போகும் போதும் ஞாபகப்படுத்தினாள். ஸையத் பதில் சொல்லாமல் ஏதோ யோசனையில் ஆழ்ந்தவர்போல் வெளியேறினார்.

• • •

ஸையத்—ஷீலா தம்பதிகளின் சம்வாதத்தின் கதாநாயகர் கோபால். அதே சமயத்தில் தமது கம்பெனி காரியாலயத்திலிருந்து வெளியேறித் தம் காரில் பரபரப்புடன் ஏறி அவசரமாகத் தாமே ஓட்டிக்கொண்டு எங்கேயோ மறைந்தார். அதனால்தான், ஸையத் தன் ஆபீசிலிருந்து அவருக்கு இரண்டு மூன்று முறை டெலிபோன் செய்தபோது. "அவர் இல்லை." "வெளியில் போனவர் வரவில்லை" என்ற பதில்கள் கிடைத்தன.

கோபால் அன்று தம் ஆபீசுக்குக் காலையிலேயே வந்து விட்டதை அவருடைய அந்தரங்க டைபிஸ்ட் — காரியதரிசி மிஸ் வயலட் கவனித்தும், அவளுக்கு இது அதிகத் திகைப்பை உண்டு பண்ணவில்லை. ஏனெனில் அவ்வாறு அவர் வந்துபோவது சமீபத்தில் இது முதல் முறையில்லை. முன்னெல்லாம் கம்பெனி காரியாலயத்துக்குச் சரியாகப் பத்தடிக்கப் பத்து நிமிஷத்துக்கு முன் வருவார்; ஐந்தடித்துப் பத்து நிமிஷத்துக்குப் பிறகு போவார். இந்த வழக்கத்



தில் ஒரு நாளாவது ஒரு விநாடி மாறுதலைக்கூட மிஸ் வயலட் (அந்தக் கம்பெனியில் சேர்ந்த இரண்டு வருஷங்களில்) பார்த்ததில்லை. ஆனால் இப்போதெல்லாம் அவர் வருவதற்கும் போவதற்கும் நிர்ணயமான ஒரு நேரமே இல்லை. காலையில் எட்டு மணிக்கு ஒவ்வொரு நாள் வருவார்; ஒன்பது மணிக்கெல்லாம் போய் விடுவார். பிறகு பிற்பகல் திரும்பி வந்தாலும் வருவார்; இல்லா விட்டால் இல்லை. ஒவ்வொரு நாள் மிகவும் நேரங் கழித்து வருவார். இரவு ஏழு, எட்டு மணி வரையில் இருப்பார். சில நாட்கள் பத்து, பன்னிரண்டு மணி வரையில்கூட இருந்திருப்பதாகக் கம்பெனியின் காவற்காரன் சொல்லக் கேட்டதுண்டு. ஒவ்வொரு சமயம் இருட்டிய பிறகுகூட மிஸ் வயலட்டை ஆபீஸில் இருக்கச் சொல்வார். ஏதாவது அந்தரங்கக் கடிதங்களை டைப் அடிக்கச் சொல்வார். தாமே காரில் ஏற்றிக் கொண்டு போய் அவளை வீட்டில் விடுவார். இதெல்லாம் மிஸ் வயலட்டுக்கு முதலில் வியப்பாக இருந்தது. ஆனால் வரவர அவள் அவருடைய புதிய நடத்தையைக் கண்டு வியப்பதை விட்டாள். ஆபீஸில் சிலர் அவருடைய நடத்தையைப் பற்றிச் சற்று இழிவாகவே வம்பு பேசிக்கொண்டனர். இதில் மிஸ் வயலட் பெயரும் அடிபட்டது.

வையத் டெலிபோன் செய்த அன்று கோபால் காலையில் கம்பெனி ஆபீஸுக்கு வந்தவர், இரும்புப் பெட்டியைத் திறந்து ஒரு கட்டு ரூபாய் நோட்டுகளாக எடுத்துத் தமது சட்டை உள் பையில் திணித்துக் கொண்டு அவசரமாகக் காரில் ஏறிக் கொண்டு காலையில் போனவர், மாலை வரையில் திரும்பி வரவில்லை. மாலை நாலரை மணி சுமாருக்குத் திரும்பி வந்ததும், மிஸ் வயலட், வையத் அவசரமாக இரண்டு மூன்று முறை டெலிபோன் செய்ததாகவும், அவர் வந்ததும் தன்னை போனில் கூப்பிடச் சொன்னதாகவும் தெரிவித்தாள். கோபால் டெலிபோனில் வையத்தைக் கூப்பிட்டார். வையத் தம்மை அன்று சாயங்காலம் வந்து சந்திக்கலாமா என்று கேட்டதற்கு, தாம் அன்று அவசர ஜோலியாக வேறு எங்கேயோ போவதால், மறுநாள் சந்திக்கலாமா என்று கேட்டார். வையத் சரி என்று ஒப்புக் கொண்டார்.

மறுநாள் எப்போது வந்து சந்திக்கலாம் என்று கேட்பதற்காக வையத் டெலிபோன் செய்தார். அன்று முழுவதும் காரியாலயப் பக்கமே கோபால் வரவில்லை என்று மிஸ் வயலட் வருத்தத்துடன் தெரிவித்தாள். கோபால் மீது வந்த கோபத்தில் வையத் தான் இனி டெலிபோன் செய்வதில்லை, அவராகக் கூப்பிடட்டும் என்று சும்மா இருந்தார். ஆனால் வீட்டிற்குப் போனதும் லீலாவின் பேச்சு வன்மை அவருடைய கௌரவத்தைப் பறக்க அடித்தது. மறுநாள் மறுபடி கோபாலுக்கு டெலிபோன் செய்தார். என்ன ஆச்சரியம்! கோபாலின் குரலே கேட்டது.

"ஹலோ! வையத்! ரொம்ப மன்னிக்க வேண்டும். ஏதோ மிக முக்கியமான ஜோலியினால் இரண்டு மூன்று நாளாக உன்னைச் சந்திக்க முடியவில்லை. இன்றுதான் சற்று ஓய்ந்திருக்கிறது — வாயேன்! நாலு மணிக்கு வந்தால் இப்படி எங்கேயாவது போய் டிபன் சாப்பிடலாம்."

"டிபனுக்கு அவசரமில்லை. உன்னோடு அவசியமாகப் பேச வேண்டும்" என்று சற்றுக்கடிந்த பதில்சொன்னார் வையத்.

"பேசினால் போச்சு! காப்பியும் சாப்பிட்டுக்கொண்டு பேசலாமல்லவா? மிஸ் வயலட்டும் நாம் சேர்ந்து காப்பி சாப்பிட்டு ரொம்ப நாளாகிறது என்கிறாள். அவளையும் அழைத்து வருகிறேன். அப்படியே ஒரு படமும் போய்ப் பார்த்து வரலாம். நாம் சேர்ந்து படம் பார்த்து ரொம்ப நாளாயிற்று, இல்லையா?" என்று மிகவும் குழைந்தார் கோபால்.

"எனக்குப் படம் கிடம் பார்க்க அவகாசமில்லை. மேலும் உன்னோடு சற்றுத் தனியாகப் பேச வேண்டும். சரியாக நாலு மணிக்கு உன் காரியாலயம் வந்து சேருகிறேன்!" என்று சற்றுக் கண்டிப்பாகக் கூறிவிட்டு, டெலிபோன் ரிஸீவரை 'டக்' என்று வைத்து விட்டார் வையத்.

அவர் சொன்னபடி சரியாக நாலு மணிக்குக் கோபால் கம்பெனிக்குள் நுழைந்தார். கோபால் ஆபீஸ் அறைக்குப் போகுமுன் மிஸ் வயலட் அறையைத் தாண்டித்தான் போகவேண்டி

யிருந்தது. "ஹல்லோ, மிஸ்டர் ஸையத்! உங்களை எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறார், மிஸ்டர் கோபால்!" என்று மிஸ் வயலட் சொன்ன மொழிகள், ஸையத்தின் வயிற்றெரிச்சலை அதிகம் கிளப்பி விட்டன. "தாங்க்ஸ்!" என்று சொல்லி விட்டு, ஸையத் அவளை ஏற இறங்க ஒரு தரம் முறைத்தார்.

"சீ! இந்தத் திராபையை எங்கே பிடித்தான்!" என்ற வெறுப்பு அவர் மனதில் அப்போது பட்டது. இதற்கு முன் ஓரிரண்டு முறை 'இந்தத் திராபையை' ஸையத் அங்கே பார்த்ததுண்டு. அப்பொழுதெல்லாம் அவருக்கு அவள் அவ்வளவு குரூபியாகவும் ராக்ஷஸியாகவும் தோன்றவில்லை. திடீரென்று இப்பொழுது ஏனோ அவர் அவளை வெறுத்தார். ஒரு வேளை கோபால் சொன்னபடி அவளுக்கிருந்த காப்பி மோகம் காரணமாக இருக்கலாம்; அல்லது கோபாலே காரணமாக இருக்கலாம்.

அன்று கோபால் கலகலவென்று தான் பேசிக் கொண்டிருந்தார். தான் அவரை மடக்கி நேருக்கு நேர் கேட்டுத் தீர்த்துவிட வேண்டும் என்ற எண்ணமெல்லாம் ஸையத் மனதிலிருந்து ஏனோ மறைந்து போய் விட்டது. போதாக் குறைக்கு அந்தச் சிறுக்கி வயலட் வேறு கூட வந்து தொலைந்தாள். அவள் எதிரில் தான் கேட்க வேண்டிய கேள்விகளை எப்படிக் கேட்பது? காப்பி ஹவுஸில் கோபால் செலவில் 'ஆம்லெட்' முதல் ஐஸ்கிரீம் வரையில் மிஸ் வயலட் வைத்துத் தீட்டியதைப் பார்த்ததுதான் மிச்சமாயிற்று. "பிக்சருக்குப் போகலாம், வா!" என்று கோபால் கூப்பிட்டதை மறுத்து விட்டு, ஸையத் வீடு திரும்பினார். கோபால் மிஸ் வயலட்டுடன் ஸினிமா கொட்டகைக்குள் நுழைவதையும் கண்ணாரப் பார்த்து விட்டுத்தான் போனார்.

வீடு வந்ததும் ஷீலாவுக்கு என்ன பதில் சொல்வது?

"பார்த்தீர்களா? உங்கள் சிநேகிதர் என்ன சொல்கிறார்?" என்று ஆவலுடன் அவள் கேட்டதற்கு, "எல்லாம் பார்த்தேன்; ஒன்றும் சொல்லவில்லை! அவன் ஏதோ ரொம்ப வேலைக் கவலையில் இருந்தான்!" என்று சொல்லித் தட்டிக் கழித்தார்.

மறுபடியும் ஷீலா அவரைத் தூண்டித் தன் ஆப்த நண்பனைத் தேடிப் பிடிப்பதற்குள், நாம் அந்த ஆப்த நண்பரின் பூர்வோத்தரத்தை ஆராய்வது அவசியம்.

• • •

கோபால் வடநாட்டுக்குக் குடியேறிப் பதினைந்து வருஷங்களுக்கு மேலிருக்கும். டில்லியில் முதலில் ஒரு கம்பெனியில் குமாஸ்தாவாக நுழைந்தார். அப்போது அவருக்குக் கலியாணமாகி மூன்று வயதில் ஒரு பெண் குழந்தை இருந்தது. முதல் முதலில் டில்லிக்கு ஐம்பது ரூபாய் சம்பளத்தில் வந்தார். ஒரு வருஷத்தில் அதே கம்பெனியில் நூறு ரூபாயாகச் சம்பளமும் உயர்ந்தது. தம் மனைவியையும் மகளையும் வரவழைத்து டெல்லியிலேயே குடும்பம் வைத்தார். அப்பொழுதெல்லாம் டெல்லியில் நூறு ரூபாய் சம்பளம் என்றால் ராஜபோகமாக இருக்கலாம். வீடு, பால், தயிர், காய்கறி, சாப்பாட்டுக்குப் பஞ்சமே இல்லை. ஐந்து வருஷங்களுக்குப் பிறகு கோபாலின் தாயார் காலமானாள்.—அவர் சிறு வயதிலேயே தகப்பனை இழந்து விட்டார். சிறிது காலத்துக்கெல்லாம் அவர் மாமனார் மாமியாரும் இறந்து விட்டனர். தனக்கும், தன் மனைவிக்கும் தங்கள் சொந்த ஊரில் இருந்த கொஞ்ச நஞ்ச பந்தமும் இவ்வாறு அறுந்து விடவே, கோபால் குடும்பத்தை டெல்லி ஸ்வீகரித்துக் கொண்டது. அவர்களும் தங்களுக்குத் தெரிந்த கொஞ்சநஞ்ச தாய் பாஷையையும் மறந்து, 'ஹிந்துஸ்தானி'களாக மாறத் தொடங்கினர்.

நாளடைவில் கோபால் தன் புத்தி சாதுரியத்தாலும், சாமர்த்தியத்தாலும் அந்தக் கம்பெனியிலேயே ஓர் உயர்ந்த உத்தியோகத்தை அடைந்தார். இன்னும் சிறிது காலத்தில் கம்பெனிக்கே முக்கிய நிர்வாக அதிகாரியானார்.

இரண்டாவது உலக மகா யுத்தத்தில் கண்டிராக்டுகள் மூலம் லாபமடைந்த கம்பெனிகளில் கோபால் நிர்வகித்த கம்பெனியும் ஒன்று. யுத்தம் முடிவதற்குள் கோபாலுக்கு அவர் அறியாமலே ஏராளமாகக் கம்பெனி மூலம் பணம் சேர்ந்தது. யுத்தம் முடிந்ததும் கோபாலே அந்தக் கம்பெனி முதலாளியானார். வியாபார விருத்தியுடன் கோபாலின் குடும்பமும் பெருகிற்று. இப்போது அவருக்கு மூன்று குழந்தைகள்.



கோபால் கம்பெனியின் தலைமைக் காரியாலயம் டெல்லியில்தான். அதற்குக் கிளை ஸ்தாபனங்கள் பல ஊர்களிலிருந்தன. அதில் முக்கியமானது ஒன்று லாகூரில் அமைக்கப்பட்டிருந்தது. உலக யுத்தம் நடக்கும்போது கோபால் தன் லாகூர் ஸ்தாபனத்தைப் பலப்படுத்த அங்கேயே போய் சில வருஷங்கள் இருக்கவேண்டி வந்தது. குடும்பத்தையும் அங்கே அழைத்துச் சென்றார். அவர் பெண் சுசீலாவுக்கு அப்போது பதினைந்து வயது. தகப்பனைப் போல் அந்த வயதிலேயே அவள் கலாசாலைப் படிப்பை எட்டிவிட்டாள். லாகூர் கலாசாலையில் அவளைவிட இரட்டிப்பு மடங்கு வயதான பஞ்சாபிப் பெண்மணிகள் உதட்டுச் சாயத்தாலும், முகப் பவுடராலும், இரட்டைப் பின்னலாலும் தங்கள் வயதை மறைக்க முயன்றாலும், ஆகிருதியில் அவ்வாறு செய்ய முடியாமல் படித்து வந்தார்கள். அந்தக் கலாசாலையில் ஆண்களும் பெண்களும் சமமாகவே படிப்பது வழக்கம்.

சுசீலாவுடன் பி. ஏ. வரையில் கலாசாலையில் கூடப் படித்தவர்களில் சமன்லால் என்ற இளைஞன் ஒருவன். அவன் பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவன். அவன் தகப்பனார் பெரிய ஜமீன்தார் வம்சத்தைச் சேர்ந்தவர்; ஜட்ஜ் பதவியும் வகித்தவர். கோபால் கம்பெனியில் அவர் பங்குகள் நிறைய எடுத்திருந்தார். அதில் டைரக்டரும்கூட. ஆகவே, சமன்லால் குடும்பத்துக்கும் கோபால் குடும்பத்துக்கும் நெருங்கிய பரிச்சயம் ஏற்பட்டது. இந்த பரிச்சயம் இளம் பரம்பரையில் இன்னும் நெருங்கிய நட்பை வளர்த்தது. சுசீலாவும் சமன்லாலும் இணை பிரியாத நண்பர்கள் ஆனார்கள். அவர்கள் இளம் உள்ளத்தில் காதல் நோய் உதித்தது. கடைசியில் ஒரு பௌர்ணமியன்று இது முற்றிப்போய் ஒருவரை யொருவர் விட்டுப் பிரிவதில்லை என்ற பிரதிக்ஞையை நிலவொளியில், சந்திரன் முன்னிலையில் எடுத்துக் கொண்டார்கள். பெற்றோர்களுக்கும் இந்தச் சங்கதி எட்டிற்று. அவர்களும், சுசீலாவும் சமன்லாலும் மணம் செய்துகொள்வதற்கு ஒருவாறாகச் சம்மதித்தார்கள். சம்மதிக்காமல் என்ன செய்வது? விவாகம் லாகூரிலேயே அடுத்த 'ஹோலி' பண்டிகைக்குள் நடத்துவதென்று நிச்சயமாயிற்று. அதற்குள் அவர்கள் கலாசாலைப் படிப்பும் முடிந்தது. சமன்லாலுக்கும் கோபால் கம்பெனியிலேயே ஒரு நல்ல உத்தியோகம் கிடைத்தது. சமன்லாலை லாகூரில் கிளை ஆபீஸில் வைத்துவிட்டு, தான் மீண்டும் டெல்லிக்குப் போவதற்காகக் கோபால் ஏற்பாடு செய்தார். முதலில் தன் மனைவியையும் குழந்தைகளையும் டெல்லிக்கு அனுப்பினார். ஒரு மாதம் கழித்து, தான் டெல்லிக்கு அவர்களுடன் வந்து சேருவதாகச் சொல்லி அனுப்பினார். சுசீலாவும் தாயாருடன் டெல்லி சென்றாள்.

* * *

இப்படியிருக்க, திடீரென்று லாகூரில் கலகம் மூண்டது. ஒரே நாளில் லாகூர் ஒரு பெரும் ரணகளமாக மாறியது. எரியும் வீடுகளும், செத்த சவங்களும் தெருக்களை அலங்கோலமாக்கின. சமன்லாலின் உடல் இரண்டு துண்டாக எங்கேயோ ஒரு சாலையில் கிடந்தது. சமன்லால் குடும்பத்தினர் அனைவரும் மடிந்தனர். கோபாலின் கம்பெனி சூறையாடப்பட்டுத் தீக்கிரையாக்கப்பட்டது. அந்தக் கலாட்டாவையும், இரத்தக் களறியையும், கோரக் கொலைகளையும் கண்டு அப்படியே திக்பிரமை பிடித்தவர் போல் கோபால் ஆகிவிட்டார். அந்தப் பிரமையில் அவர் எங்கு போகிறோம், என்ன செய்கிறோம் என்பது தெரியாமலே, ஓடும் கூட்டத்தோடும், தெருவில் சண்டை போடும் கூட்டத்தோடும் அடிபடும் கூட்டத்தோடும் மோதப்பட்டு எப்படியோ ரயிலடி வந்து சேர்ந்தார். அங்கு யாரோ அவரை அவசரமாக ரயிலில் ஏற்றி விட்டார்கள். அந்த ரயிலும், ரத்த வெறி பிடித்த ராக்ஷசர்களுக்குத் தப்பவில்லை. சற்று தூரம் சென்றதும் அது தாக்கப்பட்டது. ரயிலிலிருந்து வெளியில் தூக்கி எறியப்பட்டவர்களில் கோபாலும் ஒருவர். மண்டையில் பலத்த காயம் பட்டு அவர் மூர்ச்சித்துக் கிடந்தார். பிறகு யாரோ அவரை மீண்டும் ரயிலில் தூக்கிப் போட்டு எப்படியோ டெல்லி கொண்டு சேர்த்தார்கள். இரண்டு மாதம் ஆஸ்பத்திரியில் இருந்து உயிர் தப்பி வந்தது புனர் ஜன்மமாயிற்று.

லாகூர் கலகம் அடங்கிற்று. ஆனால் கோபால் மனதில் கொந்தளித்த ஆத்திரமும் வெறியும் அடங்கவில்லை. சமன்லால் இரண்டாக வெட்டுண்ட கோரக் காட்சி அவர் கண் முன் எப்பொழுதும் கூத்தாடிக் கொண்டிருந்தது. அவர் உடலில் பட்ட காயங்கள் ஆறின: ஆனால் இதயம் பச்சைப் புண்ணாகவே இருந்தது. தன் அருமைப் பெண் சுசீலாவின் கதியை நினைக்க நினைக்க அவர் உள்ளம் குமுறிற்று. லாகூரில் அவருடைய பணமும் கம்பெனியும் போனது அவருக்குப் பெரிதாகத் தோன்றவில்லை. அவருக்கு

டெல்லியிலும் மற்ற இடங்களிலுமுள்ள கம்பெனி வியாபாரத்திலிருந்தே ஏராளமாகப் பணம் வந்து கொண்டிருந்தது. லாகூர் ரத்தக் கிளறி அவர் உள்ளிருந்த ஒரு பேய் பிசாசைக் கிளறிவிட்டது. அவர் அன்று முதல் ஒருவித சித்தப் பிரமைக்கு உள்ளானார்.

லாகூரில் அமளியில் அடிபட்டு டெல்லியில் கொண்டு சேர்க்கப்பட்டு, ஆஸ்பத்திரியில் படுக்கையாக இருந்தார் கோபால். ஆஸ்பத்திரியை விட்டுக் குணமடைந்து வெளிவர ஒரு மாத மாயிற்று. இதற்குப் பிறகுதான் அவருடைய வாழ்க்கையிலேயே ஒரு பெரும் மாறுதலை அவர் மனைவி கண்டாள். முன்னெல்லாம் தமது கம்பெனியுண்டு, தாம் உண்டு என்றிருந்த கோபால், இப்போது வீட்டிற்கு எந்த நேரத்தில் வருகிறார், போகிறார் என்பது நிர்ணயமே இல்லாமலிருந்தது. கம்பெனியிலும் இப்படித்தான் நடந்து கொண்டார். பகல் பூராவும், பல நாட்களில் இரவு பூராவும், எங்குதான் போகிறார், வருகிறார் என்பது மர்மமாகவே இருந்தது. அந்த மர்மத்தை யறிந்தவள் அவர் ஆபீஸில் அவருக்கு அந்தரங்கக் காரியதரிசியாக இருந்த மிஸ் வயலட் ஒருத்திதான். கோபால் லாகூரில் இருக்கும்போது அங்கு அவரிடம் வேலையில் வந்து சேர்ந்த அன்று முதலே அவள் தனது சாமர்த்தியத்தினால் அவருடைய பூரண நம்பிக்கையைப் பெற்றாள். அவரும் அதற்கேற்றபடி அவளுடைய பூரண விசுவாசத்தைப் பெற்றார். லாகூரில் அவருடைய காரியாலயம் தீக்கிரையாகி, கோபால் தலைதப்பி ஓடி வருவதற்கு ஒத்தாசையாக இருந்தாள் மிஸ் வயலட். ரத்தப் போரில் இறங்கிய இரு வகுப்பிலும் சேராத அவளுக்கும் அவளுடைய வகுப்பினருக்கும் அபாயம் அதிகம் ஏற்படவில்லை. லாகூரில் ரயிலிலிருந்து எறியப்பட்டுத் தாக்கப்பட்ட கோபாலை எப்படியோ சாமர்த்தியமாக டெல்லி கொண்டு வந்து சேர்த்த பெருமையும் வயலட்டைத்தான் சேர்ந்தது.

டெல்லியில் ஆஸ்பத்திரியிலிருந்து வெளிவந்த பிறகு கோபால் ஏதோ மர்மமாக நடந்து கொண்டதாகச் சொன்னோமல்லவா? அவர் தம் கம்பெனியைக்கூடக் கவனிக்காமல் வேறு ஏதோ ஒரு விஷயத்தில் தம் மனதைச் செலுத்தி வந்தார். இந்த விஷயத்திலும் மிஸ் வயலட் அவருக்கு அந்தரங்கக் காரியதரிசியாக இருந்தாள் என்பதில் சந்தேகமில்லை. லாகூரிலிருந்து வந்த சில மாதங்களுக்குள் கோபாலுடைய பாங்கிக் கணக்கு வரவரக் குறைய ஆரம்பித்தது. அவர் புதிதாக ஈடுபட்டிருந்த இரகசியத் தொழிலுக்கு இந்தப் பணமெல்லாம் போயிருக்குமோ? யாருக்கும் அது தெரியாது — மிஸ் வயலட்டைத் தவிர.

* * *

**1947**-ம் ஆண்டு ஆகஸ்ட் 15-ந் தேதி இந்தியாவின் சரித்திரத்திலேயே மகத்தான ஒரு நன்னாளாக விளங்கிற்று. அன்று சுதந்திர சூரியன் இந்நாட்டில் உதயமானான். நாடெங்கும் மக்கள் சுதந்திரத் திருவிழாக் கொண்டாடினார்கள். டெல்லியில் சரித்திரப் பிரசித்தி பெற்ற செங்கோட்டையில் தேசத்தின் சுதந்திரக் கொடி பறந்தது. தேசத்தின் ஒப்பற்ற தலைவர் பண்டித நேரு தேச மக்களின் உணர்ச்சியின் உருவாக விளங்கினார். ஆனால் இந்தக் கொண்டாட்டத்திலெல்லாம் நாட்டிற்குத் தந்தையாக விளங்கும் மகாத்மா மட்டும் கலந்து கொள்ள அங்கு இல்லை. தேசத்தைத் துண்டு போட்டது அம்மகானின் இதயத்தையே துண்டித்துத் துடிக்க வைத்தது. டெல்லியில் சுதந்திர தினக் கொண்டாட்டத்தில் கலந்து கொள்ளாத பிரமுகர்களில் கோபாலும் ஒருவர். கோபால் அன்று முதல் நாள் இரவிலிருந்து வீட்டிலும் காணோம்; கம்பெனிக்கும் வரவில்லை.

கோபாலுடைய இத்தகைய விசித்திரப் போக்கை அவருடைய மனைவி மக்கள் கண்டு ஏங்கியதில் ஆச்சரியமில்லை. கோபால் மனைவியும் லீலாவும், லாகூரில் அவர்கள் இருந்த நாள் முதல் தங்கள் கணவர்கள் மூலம் அத்தியந்த நண்பர்களானார்கள். லீலாவின் கணவர் ஸையத் ஒரு பெரிய சர்க்கார் உத்தியோகஸ்தர். அவருக்கும் கோபாலுக்கும் லாகூரில் ஏற்பட்ட நட்பு விரைவில் மிகவும் நெருங்கி வளர்ந்தது. கோபாலும் ஸையதும் லாகூரில் எங்கு போனாலும் சேர்ந்து போவார்கள். சகோதரர்களாக வித்தியாசமில்லாமல் நடந்து கொள்வார்கள். அவர்கள் மனைவிகளும் அவ்வாறே அந்நியோன்யமாகப் பழகி விட்டனர். லாகூரில் வகுப்புத் துவேஷம் தலைவிரித்தாடியபோது கூட இரு குடும்பங்களும் இணை பிரியவில்லை. லாகூர் கலகத்துக்கு முந்திய ஸையத் டெல்லிக்கு மாற்றப்பட்டார். பிறகு, பிரிவினைக்கப்பாலும்கூட இந்தியப் பிரஜையாகவே இருக்கப் பிரமாணம் செய்தார், ஸையத். இதனால் அவரை அவர் வகுப்பினர் பலர் வெறுத்ததும் உண்டு. ஸையதிடம் கோபால் அவ்வளவு நட்பு பாராட்டுவதை கோபாலுடைய நண்பர்கள் பலர் விரும்பவில்லை.

ஆயினும் அவ்விரு குடும்பங்களும் வெளியில் நடக்கும் பகைமைப் பேய்க்கு இரையாகாமல், எப்பொழுதும்போல் டெல்லியிலும் மிகவும் அன்னியோன்னியமாகவே இருந்தன. லாகூரில் கோபாலுக்கும் அவருக்கு மருமகனாக வர விருந்த சமன்லாலுக்கும் ஏற்பட்ட கதியை நினைத்து, ஸையதும் ஷீலாவும் எவ்வளவோ மனம் நொந்தார்கள். அந்தத் தீச் செயல்களின் பாவத்தில் தங்களுக்கு ஏதோ பெரும் பங்கு இருப்பதாகவே நொந்து கொண்டார்கள். சுதந்திர தினக் கொண்டாட்டங்கள் நடைபெற்ற சில வாரங்களுக்குள், பாஞ்சாலத்தில் மீண்டும் பெருந் தீ மூண்டது. இதுவரை உலகத்திலேயே, மனித சரித்திரத்திலேயே கண்டிராத, கேட்டிராத ஒரு மாபெருங் குழப்பம் ஏற்பட்டது. பாஞ்சாலத்தின் மேற் பகுதியில் பெரும்பான்மை வகுப்பு, சிறுபான்மை வகுப்பையே அந்தப் பிரதேசத்தில் இல்லாமல் ஒழித்து விடுவதென சம்ஹார உருவமெடுத்துத் தாண்டவமாடிற்று. முன்னெல்லாம்விடப் பன்மடங்கு உக்கிரமாக அவ்வியக்கம் தலைவிரித்தாடிற்று. இதன் பயனாக ஓடிய ரத்த வெள்ளத்தில ஆண், பெண், குழந்தை, குஞ்சு, குமரர், கிழவர் என்ற தாரதம்மியமின்றி ஆயிரக் கணக்காகப் பலியாயினர். தப்பிப் பிழைத்தவர்கள் அரைத் துணியையும், தங்கள் உயிரையும் கையில் பிடித்துக்கொண்டு தஞ்சமென்று ஓலமிட்டுக் கிழக்கே ஓடி வந்தனர். தாங்கள் பிறந்த மண்ணை விட்டு, ஊரைவிட்டு, வாசலை விட்டு இப்படி ஓடிய அகதிகள் கூட்டம் சீக்கிரத்தில் லக்ஷக் கணக்கில் இரு திக்குகளிலும் சாரி சாரியாக நகரத் தொடங்கிற்று. மேற்கில் மூண்ட பகைத் தீ கிழக்கேயும் மூண்டது. மேற்குப் பாஞ்சாலத்திலிருந்து வந்து டெல்லியில் சரணடைந்த அகதிகள் நிலை பரிதாபமாக இருந்தது. தாயை இழந்த குழந்தைகளும், கணவனை இழந்த பெண்மணிகளும், கைகால்களை இழந்த ஆண் மக்களும் டெல்லி மக்களைத் திகைக்க வைத்தனர். அவர்கள் சொன்ன கோரக் கதைகளைக் கேட்டு டெல்லி மக்கள் ஆத்திரமும் அனுதாபமும் அடைந்தனர். ஏற்கெனவே சொந்தத்தில் இத்தகைய அனுபவமடைந்திருந்த கோபாலுக்கு மேற்கூறிய கதைகள் உள்ளே புகைந்து கொண்டிருந்த கனலை விஷாக்கினியாக மாற்றி விட்டன. குமுறிக் கொண்டிருந்த எரிமலை நெருப்பைக் கக்கிற்று. லாகூரிலும், மேற்குப் பாஞ்சாலத்தில் மற்ற இடங்களிலும் நடைபெற்ற அக்கிரமங்களுக்கு டெல்லி பழிக்குப் பழி வாங்கத் தொடங்கிற்று. இத் தீ மூண்டதும் அங்கு அடைக்கலம் புகுந்திருந்த அகதிகள் பலரும் இதில் கலந்து கொண்டார்கள். கோபாலும் இந்தத் தருணத்திற்குத்தான் இத்தனை நாள் காத்திருந்தார். தலைநகரத்தில் சில நாட்களுக்குள் சட்டம் அமைதி எல்லாம் இருக்குமிடம் தெரியாமல் அடித்ததற்கு மூல கர்த்தாக்களில் கோபாலும் ஒருவர்.

• • •

லாகூரிலிருந்து வந்தது முதல், ஆஸ்பத்திரியிலேயே கோபால் பெரிய திட்டம் ஒன்று தம் மனதில் போட ஆரம்பித்தார். அத்திட்டத்தின் அடிப்படைத் தத்துவம் பழிக்குப் பழி. ஆஸ்பத்திரியை விட்டு வந்ததும் தன் மூளை, பணம், அவகாசம் எல்லாவற்றையும் இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதற்காகவே அவர் செலவழித்தார். இது சம்பந்தமாகச் சில இரகசியப் பலாத்கார கோஷ்டிகளுடன் கோபாலுக்குத் தொடர்பு ஏற்பட்டது. டெல்லியில் மறைந்து வேலை செய்யும் ஒரு பெரும் படையைத் திரட்ட பண உதவி செய்தார். அவர்களுக்குத் தேவையான துப்பாக்கி, தோட்டா முதலிய ஆயுதங்களைச் சம்பாதித்துக் கொடுக்கத் தம் வியாபாரத் திறமையை உபயோகித்தார். இதனால் தான் அவர் அடிக்கடி வீட்டையும் கம்பெனியையும் கவனிக்க முடியாமற் போயிற்று.

இதில் எல்லாம் அவருக்கு மிகவும் சகாயம் புரிந்தவள் அவருடைய அந்தரங்கக் காரியதரிசி மிஸ் வயலட்தான். அவள் மூலம்தான் அவருக்குப் பல உளவுகள் கிடைத்தன. சுதந்திர தினத்தன்று, புது டெல்லியையே தவிடு பொடியாக்குவதற்கென்று பல இடங்களில் இரகசிய குண்டு உற்பத்திச் சாலைகளையும், ஆயுதங்களையும் பதுக்கி வைத்திருந்த மற்றொரு சதிக் கூட்டத்தை வெளிப்படுத்துவதில் கோபால் தீவிரமாக வேலை செய்தார்.

இதெல்லாம் தெரியாத அவர் மனைவி அடிக்கடி ஷீலாவிடம் வந்து முறையிட்டதில் அதிசயமில்லை. ஷீலாவின் கணவர் ஸையதும் பிறகு பன்முறை கோபாலைச் சந்தித்து, அவர் நடத்தையின் மர்மத்தை அறிய முயற்சித்தார். இதுவே கோபாலின் மனதில் சந்தேகப் பேயைக் கிளப்பிவிட்டது. என்னதான் இணைபிரியாத நட்பு முன் இருந்திருந்த போதிலும், இந்தப் புதிய விஷம் மனதின் நிர்மலத்தைக் கலைத்தது. ஸையத் தம்

நண்பனைச் சந்திக்க வேண்டுமென்று பல முறை முயன்றும், கோபால் சாக்கு போக்குச் சொல்லி அவர் கண்ணில் படாமல் நழுவிக் கொண்டிருந்தார். தன்னிடமே இவ்வாறு தனது நண்பன் நடந்து கொள்வது ஸையதுக்கு வேறு விதச் சந்தேகத்தை உண்டுபண்ணிற்று.

"உண்மைதான்; கோபால் முன்போ இல்லை. ஏதோ அவனுக்கு சித்தப் பிரமைதான்! அவன் நடத்தையே விநோதமாக இருக்கிறது!" என்று ஷீலாவிடம் ஸையத் நொந்து கொண்டார்.

* * *

டெல்லியில் மூண்ட வகுப்புத் தீயில் பலர் மடிந்தனர்; பலர் ஓட்டமெடுத்தனர்; பலர் வீடு வாசல்களை விட்டுப் பத்திரமான ஸ்தலங்களில் சரண் புகுந்தனர்.

ஸையத் மட்டும் அசையவில்லை. பல முறை அவருக்கும் அவர் மனைவிக்கும் அபாயம் ஏற்பட இருந்தது. ஆனால் பக்கத்தில் இருந்தவர்கள் அவரை நன்கறிந்தவர்களாதலால் அவரைக் காப்பாற்றினர். அவரும் பல அகதிகளில்—இரு வகுப்பினருக்கும்—தம் வீட்டில் இடங்கொடுத்துக் காப்பாற்றினார்.

திடீரென்று ஒரு நாள் மாலை அவர் இருந்த பக்கத்தில் பெரும் தாக்குதல் இலைப்பிற்று. யாராலும் தடுக்க முடியவில்லை. சில மணி நேரத்திற்கு அந்த வட்டாரத்தில் அராஜகம் தாண்டவமாடிற்று. வெறி பிடித்த கும்பல் ஸையத் வீட்டை நோக்கி முன்னேறி வந்தது. தப்பிக்கக்கூட வழியில்லை. ஸையத் தைரியமாக வெளியில் வந்து அந்தக் கும்பலைச் சமாதானப்படுத்த முயன்றார். அந்தக் கும்பலில் எவனோ ஒருவன் தான் வைத்திருந்த துப்பாக்கியால் அவரைச் சுட்டுவிட்டான். ஸையத் உயிரற்றுக் கீழே விழுந்தார். அலறிக்கொண்டு உள்ளிருந்து ஓடி வந்த ஷீலாவின் உடல் வாள்களுக்கு இரையாயிற்று.

"நிறுத்துங்கள்; நிறுத்துங்கள். அவர் நமக்கு வேண்டியவர்!" என்ற குரல் அலறிக் கொண்டே நெருங்கிற்று. கோபால் தலை தெறிக்க தமது நண்பனையும் அவர் மனைவியையும் காப்பாற்ற ஓடி வந்தார்; ஆனால் அவர் கண்டது அவர்களுடைய சவங்களைத் தான். அப்படியே ஒரு விநாடி திடுக்கிட்டுத் திகைப்புடன் நின்றார். அங்கு வந்திருந்த கும்பலில் பலருக்கு அவரைத் தெரியும். அவரைக் கண்டதும் அவர்கள் ஆரவாரம் செய்தார்கள்.

"சீ! மிருகங்களா! உங்களைச் சொல்லி என்ன? நானே ஒரு மிருகம் தானே!" என்று கோபால் தம் கண்களில் பெருகிய கண்ணீரைத் தடுக்க முடியாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டார். அந்த வெறிக் கும்பல் அங்கிருந்து அதிசயத்துடன் பின் வாங்கிற்று. கோபால் திக்குத் தெரியாதவர்போல் நகர்ந்தார். எங்கு போகிறோம் என்று தெரியாமலே போய்க் கொண்டிருந்தார். உலகமே அவர் கண்முன் கோரமாகச் சுழன்று கொண்டிருந்தது. அந்தச் சுழல் ரத்தச் சுழலாகத் தென்பட்டது. அந்த ரத்தச் சுழலில் மங்கலாக ஸையத்தின் புன்னகை தென்பட்டது; பிறகு அவர் மனைவி ஷீலாவின் கலங்கிய கண்கள்; பிறகு சமன்லாலின் கழுத்து மட்டும் நர்த்தனம் செய்தது; பிறகு தம் பெண் கமலாவின் வாடிய முக மலர் ரத்தத்தில் தோய்ந்திருப்பதுபோல் இருந்தது. எங்கும் ஒரே பேயிரைச்சல்! அபயக் குரல்கள்! ஓலங்களுக்கு மேலே, "மாரோ! கூன் லோவ்" என்ற கோரக் குரல்கள்; துப்பாக்கிச் சத்தம்; குண்டு வெடிக்கும் சத்தம்; தீப்பற்றிச் சீறும் சத்தம்—எல்லாம் ஒரே குழப்பமாக இருந்தது.

இவற்றுக்கெல்லாம் மேலே ஒரு மெல்லிய, தள்ளாடிய குரல் கேட்டது.

"பழிக்குப் பழி வாங்குவது ஆண்மையல்ல; பகையைப் பகையால் வெல்ல முயற்சிப்பவன் கோழை. பகையை அன்பால் வெல்பவனே வீரன்!"

திடீரென்று கோபால் மனம் தெளிவடைந்தது.

* * *

மறு நாள் டெல்லியில் மகாத்மா காந்தியின் பிரார்த்தனைக் கூட்டத்தில் குவிந்த துப்பாக்கி, கத்தி முதலிய ஆயுதங்களின் குன்று, கோபால் கொண்டு வந்து நிறைத்தது தான்.

இன்று கோபாலும், அவன் மனைவியும், பெண் கமலாவும் அகதிகளைப் பராமரிக்கும் தொண்டில் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார்கள். மிஸ் வயலட் அகதி ஆஸ்பத்திரியில் ஒரு நர்ஸாகத் தொண்டு புரிகிறாள். கோபாலின் சித்தப்பிரமையும் தெளிந்து விட்டது!



# சொல்லுவது ஒன்று....

சாமுவேல் ஆசீர்வாதம்

"இந்தப் பெண்களே இப்படித்தான், ஸார்! சின்ன விஷயத்தைப் பெரிதாக்குகிற வித்தையை இவர்களிடம் தான் படிக்க வேண்டும். ஒன்றுமில்லை ஸார், மூத்த பயலுக்கு மூக்கில் ஜலம் வடிகிறதாம். மூக்கிலே ஜலம் வடிகிறது பெரிய காரியமா, ஸார்? இதற்குள்ளே 'நிமோனியாவுக்கு ஆரம்பம்: டாஸ்மேனியாவுக்கு முடிவு' என்று இல்லாத ஆர்ப்பாட்டமெல்லாம் பண்ணுகிறாள். இப்படிச் சொல்லி நிமோனியா ஜுரத்தை வரவழைத்து விட்டுத்தான் மறுஜோலி பார்ப்பாள் போலிருக்கிறது!" என்று ஸ்ரீமான் தனரத்தினம், நான் போட்ட 'குட்மார்னிங்'குக்குப் பதில் 'குட்மார்னிங்' போடாமலே, தன்னுடைய மனைவியைப் பற்றிப் பிராது சொல்லி முடித்தார்.

"ஆமாம், பத்து மாதம் சுமந்து பெற்றவளுக்குத்தான் பிள்ளையின் அருமை தெரியும்" என்று ஸ்ரீமதி தனரத்தினம் உள்ளறையிலிருந்து முனகினாள்.

"நீ பத்து மாதம்தானே அவனைச் சுமந்து பெற்றாய்? நான் வருஷக் கணக்காக அவனைச் சுமந்து தீர்க்கலையா? மூக்கிலே ஜலம் வடிக்கிற அவனையே கேட்டுப் பாரு! ஏண்டா, சுந்தரம்! உன்னை ரொம்பத் தூக்கினது அம்மாவா அப்பாவாடா......?" என்று உள்ளறையைப் பார்த்த வண்ணம் உறுமிவிட்டு, "சுத்த நான்சென்ஸ்!" என்று சொல்லிக் கொண்டே நாற்காலியில் சாய்ந்தார்.

ஸ்ரீமான் தனரத்தினம் 'நான்சென்ஸ்' என்ற வார்த்தையை உச்சரித்த பிறகு, எந்த விவகாரத்திற்கும் முற்றுப் புள்ளி தான் என்று எனக்குத் தெரியும். எனக்கே தெரிந்த சமாசாரம் ஸ்ரீமதி அம்மையாருக்குத் தெரியாமலா போய் விடும்? ஆகவே, அவள் தோசை வார்ப்பதில் மூழ்கி விட்டாள் என்பதைச் சமையலறையிலிருந்து வந்த சத்தம் காட்டியது. உள்ளறையிலே படுத்திருந்த பத்து வயதுச் சுந்தரம் மூக்கை உறிஞ்சுகிற சத்தமும் கேட்டது.

"பெண்கள் எதிலும் பதறுவது இயல்புதானே, ஸார்!" என்று அம்மையாரின் சார்பில் ஒரு வாக்கியத்தைப் போட்டு விட்டு, சமையலறையிலிருந்து வரக்கூடிய ஒரு டம்ளர் காப்பிக்காக நான் ஆயத்தப் பட்டுக்கொண்டிருந்தேன்.

"கேளுங்கள், ஸார்! எனக்கெல்லாம் இது பிடிக்கவே பிடிக்காது. படுக்கையை விட்டு எழுந்தது முதல் இதுவரை அவன் வீட்டை என்ன பாடுபடுத்திவிட்டான்! திருட்டுப் பயல்! பள்ளிக்கூடத்திற்கு மட்டம் போடுகிறதற்குத்தான் மூக்கை உறிஞ்சினானோ என்னமோ தெரியாது. அந்த விஷயத்தை 'டயகனேஸ்' பண்ணுகிற புத்தி ஓடவில்லை. டாக்டரைக் கூப்பிட்டுக் கொண்டு வாங்கோ, அது முடியவில்லை என்றால் ஆஸ்பத்திரியையே இங்கு கொண்டு வந்து விடுங்கோ என்று குதிக்கிறாள். என்ன ஸார், பிள்ளையை வளர்க்கிறது இப்படியா, நான்சென்ஸ்!" என்று தம் முகத்தைச் சுளித்துக் கொண்டார் தனரத்தினம்.

காப்பி இன்னும் வரவில்லையே என்று என் வயிறு சுளித்துக் கொண்டிருந்தது.

"ரூசோவைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா, ஸார்?" என்று அவர் என்னைக் கேட்டார்.

"காப்பிப் பானத்தை முதல் முதல் கண்டுபிடித்தவர் அவர்தானே?" என்று நான் கேட்டேன்.

"அதென்னமோ எனக்குத் தெரியாது. பிள்ளையை வளர்க்கிறது எப்படி என்று அவர் ஒரு புஸ்தகம் எழுதியிருக்கிறார். அவருடைய 'மெதட்' ரொம்ப அருமையானது ஸார்! பிள்ளைகளுக்கு உடையே போடக்கூடாது என்கிறார். வெயிலிலும், மழையிலும் பிள்ளைகளை நன்றாய் அலைய விட்டு இயற்கைச் சக்திகளாலேயே அவர்களுடைய உடம்பைப் பக்குவப் படுத்த வேண்டும் என்பது அவருடைய கொள்கை. வியாதி வந்தால் மருந்து சாப்பிடக் கூடாதாம். வந்த வியாதி தன்னுடைய வேகத்தை எல்லாம் காட்டி முடிக்கு மட்டும் பிள்ளைகளைக் கஷ்டப்பட விட்டு விட வேண்டுமாம். அப்போதுதான் பிள்ளைகளுடைய உடம்பு, எந்த வியாதியையும் ஒரு கை பார்க்கிற வித்தையிலே



பயிற்சியுடையுமாம். எந்தப் புண்ணியவானாவது அந்தப் புஸ்தகத்தைத் தமிழிலே மொழிபெயர்த்து இந்தப் பெண்டுகள் வாசிக்கும்படி செய்தால் நன்றாயிருக்கும்! பத்து மாதம் குழந்தையைச் சுமக்கிறோம் என்று வாய் வீச்சுப் பண்ணுகிற பெண்டுகள் எல்லோரும், அந்தப் பத்து மாதமும் ரூசோவுடைய புத்தகத்தைக் கையிலே சுமந்து திரியணும். அப்போதுதான் இவர்களுக்கு நல்ல புத்தி வரும். இவன் வளர்க்கிறமாதிரி பிள்ளைகளை வளர்த்தால், கொஞ்ச நாளையிலே இந்த உலகம் என் பிள்ளைகளுக்கு ஒத்துக் கொள்ளாது ஸார்! காற்றில்லாத, வெயில் இல்லாத, மழையில்லாத ஒரு உலகத்திலே, ஜன்னலும் கதவுமில்லாத வீடாகப் பார்த்துக் குடியேற வேண்டிய நிலைமை வந்துவிடும். மூக்கிலே ஜலம் வந்துவிட்டதாம்; இன்றைக்குக் குளிக்கக் கூடாதாம்; படுத்திருக்க வேண்டுமாம். நான் ஆஸ்பத்திரிக்குப் போய், அந்தப் பயலுக்குப் பதிலாக என்னுடைய நாக்கை டாக்டருக்கு நீட்டிக் காட்டி மருந்து வாங்கிக் கொண்டு வரணுமாம். சுத்த 'நான்சென்ஸ்'......!" என்ற முற்றுப்புள்ளியுடன் ஸ்ரீமான் தனரத்தினம் தம்முடைய பிரசங்கத்தை நிறுத்திக் கொண்டார்.



அதற்குள் இரண்டு டம்ளர்களில் காப்பி கொண்டு வரப்பட்டது. "மூக்கை உறிஞ்சுகிற பயலுக்குக் காப்பி கொடுக்கலாமா? அல்லது அதுவும் விலக்குதானா?" என்று பரிகாசமாய்க் கேட்டவண்ணம் ஒரு டம்ளரை வாங்கிக் கொண்டார் தனரத்தினம். காப்பியைக் குடித்து முடித்தோம். இனிமேல் எவ்வளவு வேண்டுமானாலும் கேட்கத் தயார் என்ற நிலைமை எனக்கு உண்டாகிவிட்டது. அதை அவர் எப்படித்தான் அறிந்தாரோ? தமது ரூசோ பிரசங்கத்தை மறுபடியும் ஆரம்பித்து விட்டார்!

"பெண்களுடைய கையிலே பிள்ளைகளுடைய வளர்ப்பை ஒப்புவிக்கிறது ரொம்பத் தப்பு என்பது என்னுடைய அபிப்பிராயம், ஸார்! என் முறையிலே பிள்ளைகளை வளர்க்க விட்டால் மூக்கை உறிஞ்சுகிற பயலை என்ன செய்வேன் தெரியுமா? குளிர்ந்த ஜலத்திலே ஸ்நானம் பண்ண வைப்பேன். பழையதைச் சாப்பிடச் சொல்வேன். வெற்றுடம்பிலே வெளியே சுற்றுடா என்று விட்டுவிடுவேன். இதுதான் ஸார், ரூசோவுடைய முறை. பெண்டுகள் மூளையில் இது படவா செய்யும்? நான்......" என்று சொல்லி விட்டு 'சென்ஸ்' சொல்லி முடிக்காமலே நிறுத்திக் கொண்டார்.

முற்றுப் புள்ளி அரைகுறையாய்ப் போட்டதால், பிரசங்கமும் பாக்கி இருக்குமென்று தோன்றிற்று. ஆனாலும், இவ்வளவு கேட்டதுபோதும் என்று, "உத்தரவு கொடுக்கிறீர்களா, ஸார்?" என்றேன்.

"எங்கே போகிறீர்கள்?" என்று கேட்டார்.

"கடைத்தெருவுக்கு!" என்றேன்.

"நானும் வருகிறேன்" என்று கூறிவிட்டுச் சட்டையைப் போட்டுக்கொண்டு என்னுடன் புறப்பட்டார்.

சங்கரலிங்கம் பிள்ளை மருந்து ஷாப் பக்கத்தில் வந்தோம். "ஸார், ஒரு நிமிஷம்!" என்று என்னைத் தெருவில் நிற்க வைத்துவிட்டு உள்ளே போனார். "எம். பி. 693 இரண்டு மாத்திரை வேணும்" என்று அவர் கடைக்காரரிடம் சொன்னது எனக்குக் கேட்டது. வெளியே வந்ததும், "ஏதாவது வாங்கினீர்களா, ஸார்?" என்று கேட்டேன்.

"இல்லை ஸார், ஐந்து ரூபாய் நோட்டுக்குச் சில்லறை மாற்றப் போனேன்!" என்றார். இரண்டு மாத்திரைக் கிரயம் போக மீதிச் சில்லறையையும் காட்டினார். பிறகு, "இந்த ரூபாய் நோட்டைக் கொடுத்து வேறே நல்ல நோட் வாங்கிக் கொண்டு வந்து விடுகிறேன்" என்று கூறிவிட்டு, அவர் மறுபடியும் உள்ளே போனார். 'ஸி. ஏ. க்யூ. மாத்திரை' என்று அவர் கேட்டது என் காதில் விழுந்தது; அடுத்தாற்போல் டாக்டர் ராகவன் வீட்டண்டை வந்ததும், "ஸார்! டாக்டரிடம் ஒரு புஸ்தகம் வாங்கிக் கொண்டு வந்துவிடுகிறேன்" என்று உள்ளே போனார். கொஞ்ச நேரம் கழித்து, "ஒரு நாள் இருக்கும் மறுநாள் போய்விடும். இதற்கெல்லாம் இஞ்

சக்ஷனா ?" என்றது டாக்டரின் குரல். மறு நிமிஷம் ஸ்ரீமான் தனரத்தினம் வெளியே வந்தார்.

"இந்தப் பெண்டுகளுக்கு ஏற்றாற் போல் டாக்டர்களும் வாய்த்திருக்கிறார்கள். பேச்சு வாக்கிலே மூத்த பயலுக்குச் சளி பிடித்திருக்கிறது என்றேன். உடனே ஒரு இஞ்சக்ஷன் போடணும் என்கிறார். இந்தக் காலத்து டாக்டர்களுக்கு இஞ்சக்ஷன் பைத்தியம் பிடித்திருக்கு, ஸார்! இவரை நம் வீட்டுக்குக் கூட்டிக் கொண்டு போனால், பையனுடைய தொண்டையிலே ஒரு ஊசியை இறக்கிவிடுவார். நம் வீட்டுக்காரி அதோடு விட்டுவிடுவாளா? மூக்கிலேயும் ஒரு இஞ்சக்ஷன் போடச் சொல்வாள்! ரூசோ சரியாய்ச் சொல்லியிருக்கிறார், ஸார்! உலகத்தின் சுகக் கேட்டுக்கெல்லாம் காரணம் இந்த டாக்டர்வர்க்கந்தானென்று!" என்றார்.

நண்பர் இன்னொரு கடைக்குள் என்னையும் கூட்டிக்கொண்டு நுழைந்தார். ஒரு கம்பளிப் பனியனை வாங்கினார். "கழுத்தையும் கையையும் மறைக்கிற சட்டைகளைத் தைத்துப் பிள்ளைகளுக்கு என் ஸார் போடணும்? இப்படி ஒரு பனியனைப் போட்டாலே போதாதா? இது கூட வேண்டாம். வெற்றுடம்புடனேயே இருக்கலாம். வாத்தியார் சட்டையில்லாமல் வகுப்புக்குள்ளே வரக்கூடாது என்கிறாராம். இந்த வாத்திமாரும் பெண்களுடன் ஒத்துழைக்கிறார்கள், ஸார்!"

"ஸார், எனக்கு நேரமாகி விட்டது" என்று சொல்லி விடைபெற்றுக்கொண்டு, நான் என் நண்பரை விட்டுப் பிரிந்தேன்.

சாயங்காலம் வீட்டுக்குத் திரும்பும் போது என் நண்பரின் ஆபீசை எட்டிப் பார்த்தேன். பையனுக்குச் சுகமில்லை என்று இரண்டு மணி நேரம் லீவு எடுத்துக் கொண்டு போனதாகப் பியூன் சொன்னான். நேரே அவருடைய வீட்டுக்குப் போனேன். வீட்டில் நண்பர் இல்லை. மூத்த பயல் சுந்தரம் சாய்மான நாற்காலியில் உட்கார்ந்தவண்ணம் என்னை வரவேற்றான். அவன் உடம்பில் ஒரு சட்டை, அந்தச் சட்டைக்குமேல் கடையில் வாங்கிய கம்பளிப் பனியன்! அதற்கு மேலே ஒரு கோட்டு; கழுத்தைச் சுற்றி ஒரு மப்ளர்!

"அடே, உங்கப்பா இதை யெல்லாம் கண்டால் தூக்கித் தூரப் போட்டு விடுவாரேடா!" என்றேன்.

"அப்பா தானே போட்டுவிட்டாங்க!" என்றான் சுந்தரம்.

அச்சமயம் அங்கே வந்து சேர்ந்த ஸ்ரீமதி வேதரத்தினம், "எல்லாம் அவுங்க வேலைதான்! மாத்திரை ஒன்னை விழுங்க வைத்தார்கள்; மருந்தை வேறே உள்ளே ஊற்றி வைத்தார்கள். இத்தனையும் போதாதென்று இப்போது டாக்டரைக் கூப்பிடப் போயிருக்கிறார்கள்!" என்றாள்.

எனக்கு வந்த சிரிப்பை அடக்க முடியவில்லை. உங்களுக்கும் சிரிக்கத் தோன்றுகிறதா, இல்லையா?



# கோல்கேட்

சுவாசத்தையும் பற்களையும் சுத்தப்படுத்துகின்றது

உங்களது பற்களை கோல்கேட் முறையால் தினசரி இரண்டு முறை சுத்தம் செய்யுங்கள்.

- பற்களை வெண்மையாகவும் உறுதியாகவும் இருக்கச் செய்கிறது. சொத்தையாவதைத் தடுக்கிறது.
- ஈறுகளை ஆரோக்ய நிலையிலும் வலுவாகவும் வைக்கிறது. பயோரியாவினின்றும் காப்பாற்றுகிறது.
- வாயை சுத்தமாகவும் புதுமையாகவும் செய்கிறது. துர்நாற்றத்தை அறவே ஒழிக்கிறது.

கோல்கேட் பவுடரோ அல்லது கிரீமோ

உங்கள் இஷ்டப்படி வாங்கிக்கொள்ளலாம்







## இருமல்களுக்கும் ஜலதோஷத்திற்கும்

உபயோகிக்க மறக்காதீர்கள்

## ஸிரோலின்

"ரோச்"



உலகெங்கும் உபயோகிக்கப்படுகிறது




வருஷக்கணக்கில் டிவிடெண்டு

(இலாபம்) கொடுக்கக் கூடியது.

# தங்க முனை சேமிப்பு

... ஏனென்றும் மெண்ட்மோர் ஆடோப்ளோ பேனா இந்தியாவின் சோதனை நிலையைத் தாங்கக்கூடிய பொருள்களால் விசேஷமாக செய்யப்பட்டது. ட்ராப்-பில்லிங், லீவர், கிடட்-பில்லிங் முதலிய மாடல்களில் கிடைக்கிறது. அதனுடைய கெட்டியான நிப் 14 காரட் தங்கத்தால் செய்யப்பட்டது. ஆஸ்மி இருடியத்தில் தோய்க்கப்பட்ட முனை போடுகிறது. ஒவ்வொரு பேனா குழலின் மேலும் நிப்பின் மேலும் மெண்ட்மோர் என்ற பெயர் செதுக்கப்பட்டிருக்கிறதா என்று கவனித்துப் பாருங்கள். உங்கள் ஆயுள்கால சேவையின் அத்தாட்சி.

மெண்ட்மோர் ஆடோப்ளோ.

இங்கிலாந்தில் செய்யப்பட்டது.

ரூ. 15!

**MENTMORE**

*Auto-Flow*

FOUNTAIN PEN

வர்த்தக வியாபாரிகளுக்கு உரிமைபெற்ற முழு விநியோகஸ்தர்கள்:-

15, கந்தூராம செட்டித் தெரு, மதராஸ்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press, 116-119, Sladen's Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.

REGD. No. M. 4392

"RAJA" SNOW
For Beauty & Complexion
MANUFACTURERS
MANYAM & CO.
BANGALORE

RAJA SNOW

RAJA SNOW'S HAIROIL

ராஜா
ஸ்னோ,
ஹேர் ஆயில்,
கஸ்தூரி ஸோப்.

RAJA SNOW'S
Kasturi Soap
MANYAM & CO.,
BANGALORE.

FAS-10

MANYAM & CO., BANGALORE – MADRAS – BOMBAY.

பம்பாய் ஆபீஸ்: 112, ஓல்டு மோடி ஸ்ட்ரீட், போர்ட், இலங்கைக்கு சோல் டிஸ்டிரிப்யூட்டர்கள்:
மெஸர்ஸ். துரை, அருள் & கோ., லிட்., 93, கெய்ஸர் தெரு, கொழும்பு